# உன் பிரஷில் ரத்தம் கண்டால்

## ஆபத்திற்கு அறிகுறி...

...பல் ஈறுகள் கெட்டுப்போகும் என்பதற்கு அதுதான் எச்சரிக்கை! கொடிய ஈறு உபாதைகளாகிய பயோரியாவோ அல்லது ஜிஞ்ஜிவிடிஸோ உங்கள் பற்களை நாசமாக்கி தேகாரோக்கியத்தையும் பாழாக்கலாம். இந்த அபாயத்தைப் போக்க கிப்ஸ் "எஸ். ஆர்." டூத் பேஸ்ட் உபயோகியுங்கள்—அது ஈறு வியாதியைத் தடுக்கவும் கட்டுப்படுத்தவும் வல்லது. அதிலுள்ள ஸோடியம் ரெஸினோலியேட் ஈறு உபாதைகளைக் குணப்படுத்த பல் வைத்தியர்கள் உபயோகிக்கிறார்கள். வழக்கமாக கிப்ஸ் "எஸ். ஆர்." உபயோகித்தால் அது உங்கள் ஈறுகளை ஆரோக்கியமாகவும் பற்களை உறுதியாகவும் வைத்திருக்கும்.

**Gibbs**

# "S.R." TOOTHPASTE



GSR. 18-33 TM — D & W. GIBBS LTD., LONDON, ENGLAND



# கைத்தொழில் மூலம் சட்டதிட்டமான அபிவிருத்தி

மேநாடுகளுக்கிடையில் சம அந்தஸ்துடன் தனக்குரிய ஸ்தானத்திலமர இந்தியா விவசாயத்தைப் புறக்கணிக்காமல் கைத்தொழில் விஷயத்தில் தனது மோசமான நிலைமையை சீக்கிரம் சமாளித்துக் கொள்ளுதல் மிக அவசியமாகும். கைத்தொழில், விவசாயம் இரண்டையும் சரியாக இணைத்துக் கொண்டு செல்வதிலேயே நாட்டின் உண்மை அபிவிருத்தி இடப்பது.

அது காரணமே ஜே. கே. தொழிற் ஸ்தாபனங்கள் இன்று ஓர் கைத் தொழிலபிவிருத்தி சட்ட திட்டத்தில் முனைந்து வேலை செய்து வருவது. அத் திட்டத்தின் உத்தேசம் இயற்கை விபவங்களை செழுப்பித்து இந்தியாவைக் கைத்தொழில் விஷயத்தில் பிற நாடுகளை நம்பியிராது தற்சார்பாகச் செய்தலும், ஜனங்களின் பொருளாதார நிலைமை உயர்த்தலும், பொது மக்களின் வாழ்க்கை, கல்வி, சுகாதார வசதிகளை ஒழுங்காக வளர்ச்சியுறச் செய்தலுமேயாகும்.

ஜே. கே. ஸ்தாபனங்கள் தங்கள் அங்க ஸ்தாபனங்கள் வழியாக பற்பல கைத்தொழிற் துறைகளிலிறங்கி மிகுந்த அக்கறையுடன் முயற்சித்து வருகின்றன.

## பொருள்களும், தொழில்களும்

நெசவுகள் : பருத்தி* கம்பளி* ஹெஸியன்* சணல்* இரும்பு, எஃகு* உலோக நிர்மாண வேலைகள்* ரசாயனப் பொருள்கள்* குடும்பத்திற்கும் கைத் தொழிலுக்கும் வேண்டிய எண்ணெய்களும் ஸோப்புகளும்* வனஸ்பதி, சர்க்கரை மற்ற உணவுப் பொருள்கள்* ஐஸ்* எலெக்ட்ரிக் ப்ளாஸ்டிக் பிட்டிங்குகள்* கைத்தொழிலுக்கு ஏற்ற ரப்பர் பொருள்கள்* ப்ளைவுட், லாமினேட்டட் கட்டட போர்டுகள்* ஸ்ட்ரா போர்டு* பஞ்சு போர்டு* கண்ணாடிச் சாமான்கள்* அலுமினியம்* ப்ரொடியூஸர் கியாஸ் ப்ளாண்ட்* டயர் பழுது பார்த்தல்* பாங்கிங்* இன்ஷுரன்ஸ்* லேவாதேவியும் முதலீடும்.



**ஜே. கே. இண்டஸ்ட்ரீஸ்**

**கமலா டவர், கான்பூர்.**



குளிர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது!



நான் களைப்படையாமல் இருக்கிறேன்!

வினோலியா அதிக சுகத்தைக் கொடுக்கக் கூடிய சோப். அதை உபயோகிப்பதனால் ஒவ்வொரு ஸ்நானமும் குளிர்ச்சியையும், உத்ஸாகத்தையும் உண்டு பண்ணுகிறது. இந்த சோப்பின் வாசனை களைப்படைந்த நரம்புகளுக்கு சோர்வை போக்கி சுகத்தைக் கொடுக்கிறது.



உத்ஸாகத்தைக் கொடுக்கிறது!



**வினோலியா ஒயிட் ரோஸ் ஸோப்பு**

VINOLIA CO. LIMITED, LONDON, ENGLAND

இவ் வருஷத்திய மகோன்னத தயாரிப்பு!

**பெங்களூர்** — **22உ** — **மைசூர்**

ஹவிலாண்டு — முதல் — மோதிலால் டாக்கீஸ்





ஆந்திரா வீடட் ஜில்லாக்களுக்கும், நிஜாம் சமஸ்தானத்திற்கும்:

சாமரையா டாக்கி டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ், பெஜவாடா





மலர் 4 இதழ் 32

1945 மார்ச் 18

தாரண ௵ பங்குனி 5






இவர் யார், இந்த மகரிஷி? மகரிஷிதான், சந்தேகமில்லை. ஆனால் காட்டில் வசிக்கும் மகரிஷி அல்ல; தியாகராஜ நகரில் ஒரு சிறு வீட்டில் வசிக்கும் மகரிஷி. கர்மயோகியும், கல்வித் தொண்டிற்குத் தமது வாழ்நாளை அர்ப்பணம் செய்தவருமான ஸ்ரீ எஸ். வாசுதேவாச்சாரியார் அவர்கள்தான்.

சென்னை வெஸ்லி மிஷன் கல்லூரியில் வெகு காலம் வரை ஸ்ரீ வாசுதேவாச்சாரியார் ஆசிரியராகவும், பின்னர் உதவி பிரின்ஸிபாலாகவும் வேலை பார்த்து வந்தார். தமிழ் நாட்டில் குருகுல முறையில் ஒரு வித்யாலயம் அமைக்க வேண்டுமென்று பல நாளாகக் கனவு கண்டு கொண்டிருந்தார்.




வேலையைவிட்டு விலகியபிறகு, அவரது கனவு பலிப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது. சுமார் நாற்பது வருஷங்களுக்கு முன், சில நண்பர்களுடன் சென்னையில் ராமகிருஷ்ண மிஷன் வித்தியாலயத்தை ஆரம்பித்தார். ஆரம்பத்தில் ஆறு மாணவர்களுடன் சின்னஞ் சிறு பள்ளிக்கூடமாக இருந்தது. அங்கங்கே சென்று பணமும் பொருளும் தேடினார். அவரது சளியாத உழைப்பின் பலனாகவும், நிர்வாகத் திறமையாலும், இன்று ராமகிருஷ்ண வித்யாலயம் பிரசித்தி பெற்று விளங்குகிறது.

இத்துடன் அவர் திருப்தி யடைந்துவிடவில்லை. 1932-ம் வருஷம் தியாகராஜநகரில் ராமகிருஷ்ண மடத்தின் ஆதரவில் உயர்தரப் பள்ளிக்கூடம் ஒன்று ஆரம்பித்தார். நாளதுவரை அதன் நிர்வாகியாகவும் செக்ரெடரியாகவும் இருந்து வருகிறார். 300 மாணவர்களுடன் பள்ளிக்கூடம் ஆரம்பமாயிற்று. இப்பொழுது எட்டுப் பள்ளிக்கூடங்களும் மூன்று ஹாஸ்டல்களும் மாம்பலத்தில் இருக்கின்றன. மொத்தம் ஐயாயிரம் மாணவர்கள் இவற்றில் வசிக்கிறார்கள்!

ஸ்ரீ வாஸுதேவாச்சாரியாருக்கு வயது 75 ஆகிறது. ஆனால், இளமையின் ஆர்வத்துடனும், முதுமையின் அனுபவத்துடனும் மேலும் மேலும் இளைஞரின் கல்விக்காக உழைத்து வருகிறார். பண்டைக் காலத்து முனிவர்களை யொத்த இப்பெரியார் பாலர்களின் உள்ளத்தில் ஏற்றிவைக்கும் ஞானச் சுடர் விளக்கு நீடூழிகாலம் நின்று பிரகாசிக்கும் என்பதில் ஐயமில்லை.



# கல்கி

மலர் 4 } தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் { இதழ் 32

# என்ன சேதி?

## மாணவர் யுத்தம்

நமது மார்ச் 4உ இதழில் வெளியாகியிருந்த மாணுக்கரின் கடிதம் பற்றியும், அதற்கு நாம் எழுதியிருந்த பதிலைப் பற்றியும் பல கடிதங்கள் நமக்கு வந்திருக்கின்றன. அவற்றையெல்லாம் நாம் வெளியிடுவதாயிருந்தால், "கல்கி" பத்திரிகையை மாணுக்கரின் யுத்த அரங்கமாக மாற்றிவிட வேண்டியதாகும். மாணுக்கர்கள் தங்களுக்குள் அநாவசியமான விரோத பாவத்தையும் கட்சி வைஷம்யத்தையும் ஒழித்து ஒற்றுமையாகத் தேச நன்மைக்கான காரியங்களில் ஈடுபட வேண்டுமென்பதே நமது நோக்கமாதலால், காரசாரமான மேற்படி கடிதங்களை வெளியிடாமல் விடுகிறோம். அதோடு, மாணுக்கர் இயக்கம் சம்பந்தமாக மகாத்மா காந்திஜியின் விருப்பம் இன்னதென்று சமீபத்தில் ஆசிரியர் அகர்வால் வெளியிட்டிருப்பதையும் படித்துச் சிந்திக்கும்படி இருதரப்பு மாணுக்கர்களையும் கேட்டுக் கொள்கிறோம்.

## யுத்த காரணம்

உண்மையில் இந்த மாணவர் யுத்தத்தின் காரணம் என்ன, இதன் இலட்சியங்கள் யாவை, இருதரப்பிலும் அணிவகுத்து நிற்பவர்களின் யோக்யதாம்சங்கள் என்ன என்னும் விஷயங்கள் நமது மற்ற நேயர்களில் அநேகருக்கு இன்னும் பிடிபடாமலே இருக்கலாம். நமக்குக்கூட இவை வெகுகாலம் வரை குழப்பம் விளைவித்து வந்தன. "மாணவர் சம்மேளனம் எது? மாணவர் காங்கிரஸ் எது? எது எப்போது ஆரம்பமாயிற்று? இரண்டுக்கும் உள்ள ஒற்றுமை, வேற்றுமைகள் என்ன? எது எந்தக் கட்சியை அல்லது எந்தக் கொள்கையை அவலம்பிப்பது?" என்பது சந்தேகத்துக்கிடமாகவே யிருந்தது. கடைசியாக, மலையைக் கெல்லி எலியைப் பிடிப்பது போல் பின்வரும் விஷயங்கள் தெளிவாயின:—

(1) மாணவர் சம்மேளனம் என்பது ஒரு ஸ்தாபனம்; மாணவர் காங்கிரஸ் என்பது இன்னொரு ஸ்தாபனம்.

(2) மாணவர் சம்மேளனம் 1936-ம் ஆண்டில் ஆரம்பமாகித் தொடர்ந்து நடந்து வருவது; மாணவர் காங்கிரஸ் சென்ற 1944-ம் ஆண்டில் புதிதாக ஆரம்பமானது.

(3) மாணவர் சம்மேளனம் இந்தியப் பொது உடைமைக் கட்சிக்காரர்களின் ஆதிக்யத்தில் நடந்து வருவது; மாணவர் காங்கிரஸ், தேசிய காங்கிரஸ் மகா சபையின் கொள்கைகளைக் கலப்பின்றி ஸ்வச்சமாக அவலம்பிக்கிறவர்களால் ஸ்தாபித்து நடத்தப்படுவது.

"சரி; மேற்படி இரு ஸ்தாபனங்களுக்குள்ளும் யுத்தத்துக்குக் காரணம் என்ன?" என்று கேட்டால், இப்போதெல்லாம் புதிதாக ஏற்பட்டு வரும் காங்கிரஸ் சங்கங்களிலிருந்து பொது உடைமைக்காரர்களை விலக்குவதற்கு என்ன காரணங்கள் உண்டோ, ஏறக்குறைய அவையேதான். அதாவது, சம்மேளனத்தைச் சேர்ந்த மாணவர்கள் தேசிய காங்கிரஸின் ஆகஸ்டு தீர்மானத்தை எதிர்த்தது, இந்த யுத்தத்தை (அதாவது உலக யுத்தத்தை) "ஜனங்களின் யுத்தம்" என்று சொன்னது, ருஷிய ஸோவியத் ஆட்சி முறையைப் பாராட்டுவது முதலியவைதான்.

## "ஜனங்களின் யுத்தம்"

பொது உடைமைக் கட்சியார் இந்த யுத்தத்தை "ஜனங்களின் யுத்தம்" என்று சொல்லி அதற்காகத் தீவிரப் பிரசாரம் செய்தது ஒரு வேண்டாத

காரியம், அநாவசியமான ஆர்ப்பாட்டம் என்று நாம் கருதுகிறோம். நேரிடையாக யுத்தத்தில் ஈடுபட்ட ருஷியாவில் மேற்படி பிரசாரம் அவசியமாயிருந்தது. இந்தியாவுக்கும் நேரில் யுத்தம் வந்திருந்தால், அப்போது "ஜனங்களின் யுத்தம்" என்னும் பிரசாரத்துக்குப் பலம் இருந்திருக்கும். அவ்விதமின்றி, யுத்தம் வெளியிலேயே நின்ற போது, இந்தியாவின் சுதந்திரத்துக்கு பிரிட்டிஷார் முட்டுக்கட்டை போட்டு, வந்த நிலைமையில், "ஜனங்களின் யுத்தம்" என்ற கோஷம் ஜனங்களின் காதில் ஏறுவது கடினந்தான். மற்றப்படி பொது உடைமைக் கட்சியார் எத்தனையோ அரிய தொண்டுகள் தேசத்துக்கும் தேச மக்களுக்கும் செய்திருந்தும், மேற்படி வேண்டாத பிரசாரத்தினால் பலருடைய வீண் வெறுப்புக்கு இடமாக நேர்ந்தது. இதை இந்தியப் பொது உடைமைக் கட்சியின் துரதிர்ஷ்டம் என்று சொல்ல வேண்டும். மேற்படி பிரசாரத்தினால் யுத்தத்துக்கு எவ்வித லாப நஷ்டமும் உண்டாகி விடவில்லை. இன்னும் சர்க்காருக்கோ ஜனங்களுக்கோ எத்தவித நன்மை தீமையும் ஏற்பட்டு விடவில்லை. மொத்தத்தில், வழியோடு போகிற தொல்லையை விலை கொடுத்து வாங்கிக் கொண்ட சமாசாரம்.

ஆனால், இந்த யோசனைக் குறைவுக்காகக் கம்யூனிஸ்டுகளை இவ்வளவு துவேஷிக்க வேண்டுமா, பழி வாங்க முயலவேண்டுமா, இங்கிலீஷ்காரர்களிடம் காட்ட முடியாத கோபத்தை இவர்கள் மேல் திருப்ப வேண்டுமா என்றால், "கூடவே கூடாது" என்பதில் நமக்கு எள்ளளவும் சந்தேகமில்லை. அது அநியாயம் என்பது மட்டுமல்லாமல், தேசத்தில் சுயநலமற்ற உண்மைத் தொண்டர்களுக்குள்ளே பிளவை உண்டுபண்ணி, தேச விடுதலைக்கு மற்றொரு முட்டுக்கட்டை போடுவதாகும்.

## சுயநல யுத்தம்

இந்த யுத்தத்தின் தலையில் ஒரு பெயரைச் சூட்டிவிட்டு, அதற்காகப் பிறகு நமக்குள் சண்டை போட்டுக் கொண்டிருப்பது போன்ற அபத்தமான காரியம் வேறொன்றுமில்லை. இதற்கு "ஏகாதிபத்திய யுத்தம்" என்று பட்டம் சூட்டியதன் காரணமாகத் தேசிய காங்கிரஸினால் எத்தனையோ முரண்பாடுகளுக்கு உள்ளாக வேண்டியிருந்தது. "இராஜ்யத்தை எங்களிடம் கொடுத்தால் ஜப்பானுடன் முழு பலத்துடன் சண்டையிடுவோம்" என்றும், "தேசிய சர்க்கார் ஏற்படுத்தினால் யுத்த முயற்சி பன்மடங்கு தீவிரமாக நடக்கும்" என்றும் காங்கிரஸ் தலைவர்கள் இடைவிடாது சொல்லி வந்திருக்கிறார்கள். இராஜ்யம் நம்முடைய கையில் வந்து விட்டால் மட்டும் ஏகாதிபத்திய யுத்தம் அந்த க்ஷணமே பொது ஜனங்களின் யுத்தமாக எப்படி மாறிவிடும்?

உண்மையில், இந்த யுத்தத்தைச் சுயநல யுத்தம் என்று சொல்வதுதான் மிகவும் பொருத்தமாயிருக்கும். யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் எல்லாத் தேசங்களும் (சென்ற வாரத்தில் சேர்ந்த துருக்கி உள்பட) ஏதோ ஒரு வகையில் சொந்த நன்மையை முன்னிட்டே சேர்ந்திருக்கின்றன. இந்தியாவில் நாமும் நமது நன்மை அல்லது தீமையை மட்டும் முன்னிட்டு நமது யுத்தக் கொள்கையைத் தீர்மானித்திருந்தோமானால், எவ்வளவோ வீண் குழப்பங்களும் தொல்லைகளும் இல்லாமல் போயிருக்கும்.

## நமது விண்ணப்பம்

ஆகக்கூடி, கடைசியாக, மாணாக்கர்களை (இருதரப்பாரையும்) நாம் வேண்டிக் கொள்வதென்னவென்றால், "ஜெர்மன் - ஜப்பான் யுத்தங்கள் எக்கேடாவது கெடட்டும்; நீங்கள் உங்களுடைய யுத்தத்தைத் தயவு செய்து நிறுத்துங்கள்!" என்பதுதான். அந்தப் பெரிய யுத்தமானது நம்முடைய ஆதரவினாலோ, எதிர்ப்பினாலோ பாதிக்கப் படக்கூடிய காலம் மலையேறி விட்டது. உலகமெல்லாம் யுத்த நிறுத்தத்தை எதிர்நோக்கும் காலம் வந்துவிட்டது. யுத்தம் நின்றதும் உலகத்தின் நிலைமை தலைகீழாக மாறுமே, அந்த சந்தர்ப்பத்தில் தத்தம் நன்மைகளை எப்படிப் பாதுகாத்துக்கொள்வது என்று எல்லாத் தேசங்களும் சிந்தித்துக் கொண்டிருக்கின்றன. இந்தியாவில் நாம் மட்டும் பழைய சண்டைகளைப் புதுப்பித்து நடத்திக் கொண்டிருப்பது எப்பேர்ப்பட்ட பைத்தியக்காரத்தனம்? எனவே, ஒன்றுபட்டு ஒற்றுமையாகத் தேசப் பணியில் ஈடுபடுங்கள். "இல்லை; இரண்டு ஸ்தாபனங்கள் தனித்தனியாக நடக்கத்தான் வேண்டும்" என்றால், அப்படியே நடத்துங்கள்; ஆனால் ஒருவரையொருவர் திட்டுவதையும் தாக்குவதையுமாவது நிறுத்தி விடுங்கள் என்று கேட்டுக் கொள்கிறோம். தேசத்துக்கு மாணாக்கர்கள் செய்யக்கூடிய பெரிய சேவை இதுவேயாகும். மகாத்மாவின் யோசனைக் கிணங்க, ஆசிரியர் அகர்வால் கேட்டுக் கொள்வதும் இதுவேதான்.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: என். சுந்தரேசன், நெ. 218-3, வெங்கடேச ரோடு, [illegible].



இந்தியாவின் விநோதப் பறவைகள்!
சான்பிரான்ஸிஸ்கோ கண்காட்சி
சாலைக்கு!




காங்கிரஸும் லீகும் ஒன்று சேர்ந்தால்.....
இந்திய சட்டசபையில் காங்கிரஸ் லீக் ஐக்யம்
அதிகாரவர்க்கம்




முஸ்லிம் லீக் தனியாக இருக்கும் பொழுதோ....
அதிகாரவர்க்கம்
பஞ்சாபில் தோல்வி
அஸ்ஸாம்
சிந்துவில் குழப்பம்

-உம்மன்


ஹிந்து சீர்திருத்த மசோதா
சநாதனிகள் ஹிந்து சீர்திருத்த மசோதாவை எதிர்க்கத் தொடங்கி யிருக்கிறார்கள்.
சநாதனிகள்


ராணுவ சௌகர்யத்தை உத்தேசித்து, பம்பாய் பொதுஜனங்கள் நடை பாதைகளைத்தான் உபயோகிக்க வேண்டுமென்று கட்டாயப் படுத்தப் படுகிறார்கள்.
ராணுவ தேவை
பம்பாய் வாசிகள்


காங்கிரஸும் லீகும் சேர்ந்து, சட்டசபையில் கிடுக்கித் தாக்குதலை நடத்திவருவதாக ஸர் அர்தேஷிர்தலால் புகார் செய்தார்
லீக்
காங்கிரஸ்

# உலக மோசடி-நெ. 1

உலக அதிசயங்கள் ஏழு என்றும் ஒன்பது என்றும் கேள்விப்பட்டிருக்கிறோம்.

உலக அதிசயங்களில் ஒன்றாகிய தாஜ்மஹால் கட்டிடம் நமது இந்தியா தேசத்தில் இருக்கிறது என்னும் பெருமையையும் அடைந்திருக்கிறோம்.

உலக அதிசயங்களைப் போலவே உலக மோசடிகளும் பிரசித்தி பெற்று விளங்குகின்றன. ஆனால், அவை மொத்தம் இவ்வளவு என்று இதுவரை யாரும் கணக்குப் பண்ணியதாகத் தெரியவில்லை.

எனினும், அந்த உலக மோசடிகளில் நெ. 1 மோசடி நமது இந்தியாவிலே நிலை பெற்று விளங்குகிறது என்னும் பெருமைக்கு நாம் உரியவர்களாயிருக்கிறோம்.

## பல ரக மோசடிகள்

நமது பழம்பெரும் பாரத நாட்டில் மோசடிகளுக்குக் குறைவே கிடையாது.

ஒரே மருந்தினால் சர்வ வியாதிகளையும் வியாதியஸ்தன் உள்படத் தீர்த்து விடும் மோசடியை இங்கே காணலாம்.

நாலணாக் கொடுத்து வாங்கும் தாயத்தினால் உத்தியோகத்தில் பிரமோஷன், காதலில் வெற்றி, சந்ததி அபிவிருத்தி, கோர்ட்டில் ஜயம் — இவ்வளவு பலன்களையும் அடையும் மோசடியை இந்நாட்டில் காணலாம்.

அரை ரூபாயுடன் பகுத்தறிவையும் கொடுத்து 50,000 ரூபாய் சம்பாதிக்கும் மோசடியையும் இங்கே பார்க்கலாம்.

செத்துப் போன மகான்கள் பாம்பாகவோ, பாம்பைக் கொல்லும் கீரிப் பிள்ளையாகவோ, கீரிப் பிள்ளையை அடிக்கும் தடியாகவோ அவதாரம் எடுத்து, இந்த உலகத்திலேயே மோட்சத்தை அளிக்கும் மோசடியையும் இந்தப் புண்ணிய பூமியில் பார்க்கலாம்.

ஆனால், இவை யெல்லாம் உலக மோசடி என்று சொல்வதற்குரிய பெருமை வாய்ந்ததாக மாட்டா. இவை வெறும் தேசீய மோசடிகள்தான்.

உலக மோசடி என்று சொல்வதற்குத் தகுதி வாய்ந்தது, இந்தியாவில் ஒன்றே ஒன்றுதான் இருக்கிறது. அதனுடைய நாமதேயம், இந்திய சட்ட சபை.

## ஜனன கால விசேஷம்!

உலகத்தின் முன்னிலையில் இந்தியாவுக்குப் பிரசித்தி தரக்கூடியதான இந்த உலக மோசடியானது, சுமார் பதினோரு வருஷங்களுக்கு முன்னால் இந்தியாவில் அவதாரம் எடுத்தது.

1934-ம் வருஷத்தில் சென்னை மாநகரில் சர் ஏ. ராமஸ்வாமி முதலியாரும் ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தியும் போட்டி போட்டு நடந்த தேர்தல் ஞாபகம் இருக்கிறதா? அந்தத் தேர்தலின் பயனாக ஏற்பட்ட இந்திய சட்டசபை தான் இது.

மேற்படி தேர்தலில் வெற்றி பெற்ற ஸ்ரீ சத்தியமூர்த்தி காலமாகி, அவருக்குத் தக்க ஞாபகச் சின்னம் அமைக்கத் தமிழ்நாட்டுத் தேச பக்தர்கள் முயன்று வருகிறார்கள்.

ஆனால், அப்போது அமைக்கப்பட்ட இந்திய சட்ட சபைக்கு மட்டும் இன்னும் காலம் வந்தபாடில்லை.

ஸ்ரீ சத்தியமூர்த்தியைப் போல் அந்த நாளில் தேர்ந்தெடுக்கப்பட்ட இன்னும் பல அங்கத்தினர்கள் பரலோகம் அடைந்து விட்டார்கள்.

கடைசி கடைசியாக, பத்து நாளைக்கு முன்னால் மேற்படி 'ஆய்வந்த' சபையில், ஆந்திரப் பிரதிநிதி ஸ்ரீ கே. எஸ். குப்தா அவர்கள், "தேசத்திலே உணவு இல்லை, உடை இல்லை; வைத்தியர் இல்லை, மருந்து இல்லை" என்று அலறி விட்டு அப்படியே தமது ஆசனத்தில் விழுந்து உயிர் துறந்தார்.

ஆனால், இந்திய சட்டசபை மட்டும் எத்தனையோ பேரை விழுங்கி விட்டுத் தான் சிரஞ்சீவியாயிருக்கிறது.

சென்ற பத்து வருஷத்துக்குள்ளாக உலகத்தில் எத்தனையோ மாறுதல்கள் நடந்து விட்டன. அரசாங்கங்கள் மாறின. அரசர்கள் முடி துறந்தார்கள். வங்காளத்தில் 50 லட்சம் பேர் பஞ்சத்தில் உயிர் துறந்தார்கள்.

ஆனால், இந்திய சட்டசபை மட்டும் இன்னும் உயிரோடு இருக்கிறது. ஜனன கால விசேஷந்தான்!

## தோல்வி மயம்

பிரிட்டிஷார் யுத்தத்தில் ஜெயத்துக்குமேல் ஜெயம் அடைந்து வருகிறார்கள். தோல்வி யடைவதுபோல் அடைந்து கடைசியில் எப்படியோ ஜெயித்து விடுகிறார்கள். தாங்கள் ஜெயிக்காதபோது, பிறருடைய ஜெயத்தைத் தங்களுடைய ஜெயமாகக் காட்டிக் கொள்கிறார்கள்.

அதற்கெல்லாம் பதிலாக, அவர்கள் தோல்விக்குமேல் தோல்வியாக அடைந்து வரும் இடம் ஒன்று இருக்கிறது. அதுதான் இந்திய சட்டசபை.

சென்ற பத்து வருஷத்தில் இந்திய சட்டசபையில் பிரிட்டிஷ் சர்க்கார் சுமார் 308 தடவையாவது தோல்வி யடைந்திருப்பார்கள்.

இவ்வளவு தோல்விகளுக்குப் பிறகும் பிரிட்டிஷ் சர்க்கார் கொஞ்சமும் வெட்கம் அடைந்ததாகத் தெரியவில்லை. முதுகைத் தடவிக்கொண்டு எழுந்து நிற்கிறார்கள். மறுபடியும் சண்டைக்குத் தயாராகிறார்கள். சண்டைக்குத் தயாராகும் போது கீழே விழுவதற்கு மெத்தையையும் எடுத்துப் போட்டுக் கொள்கிறார்கள்!

## செலவு ஏறுகிறது

வருஷா வருஷம் இந்திய சர்க்கார் வரவு செலவுத் திட்டம் என்பதாக ஒன்றைப் போட்டு, அதை இந்திய சட்டசபையில் ஆஜர் செய்வது என்பதாக ஒரு சம்பிரதாயம் இருந்து வருகிறது. மேற்படி வரவு செலவுத் திட்டத்தை இந்திய சட்டசபை அங்கத்தினர்கள் அலசி ஆராய்ந்து, இனம் இனமாக அனுமதிப்பது அல்லது நிராகரிப்பது என்று ஒரு கேலிக் கூத்தும் சென்ற பத்து வருஷமாக நடந்து வருகிறது. ஆனாலும் சென்ற எட்டு வருஷத்தில் இந்தியாவின் வரிச்சுமையும் செலவுத் தொகையும் கடன் பாரமும் எப்படி வளர்ந்து வந்திருக்கின்றன என்று பாருங்கள்:

(ரூ. கோடிக் கணக்கில்)

| | வரவு | சிவில் செலவு | ராணுவச் செலவு | செலவு மொத்தம் | அதிகச் செலவு |
|---|---|---|---|---|---|
| 1938-39 | 84 | 39 | 46 | 85 | ... |
| 1939-40 | 95 | 37 | 50 | 87 | ... |
| 1940-41 | 107 | 40 | 74 | 114 | 6 |
| 1941-42 | 134 | 43 | 104 | 147 | 13 |
| 1912-43 | 177 | 74 | 215 | 289 | 112 |
| 1943-44 | 254 | 263 | 84 | 347 | 92 |
| 1944-45 | 357 | 115 | 397 | 512 | 155 |
| 1945-46 | 354 | 123 | 394 | 517 | 163 |

## பணம் பொங்குகிறது

இந்தியா தேசத்தில் வறுமை என்றும் தரித்திரம் என்றும் யார் சொன்னார்கள்? பஞ்சம் என்றும் பட்டினி என்றும் யார் சொன்னார்கள்? சர்க்கார் வரவு செலவுத் திட்டத்தில் பணம் எப்படிப் பொங்கி யிருக்கிறது பாருங்கள்! 84 கோடி எங்கே, 354 கோடி எங்கே? 1938-ம் வருஷத்தில் மொத்த வரவு செலவு எவ்வளவோ அதைக் காட்டிலும் சரியாக இரண்டு பங்கு நாளது வருஷத்தில் துண்டு மாத்திரம் விழுந்திருக்கிறது!

இந்திய மக்களிடமிருந்து இவ்வளவு வரி எப்படி வசூலிக்க முடிந்தது. இவ்வளவு கடன் எப்படி வசூலிக்க முடிந்தது என்பதெல்லாம் நேயர்கள் நன்கு அறிந்த விஷயமே.

இந்திய சர்க்காரின் நோட்டு அடிக்கும் அச்சுக் கூடங்கள் தீவிரமாக வேலை செய்தன. அச்சடித்த நோட்டுக்களைக் கொடுத்து, பதிலுக்கு யுத்தத்திற்கு வேண்டிய சாமக்கிரியைகளையும் யுத்தத்திற்கு வேண்டிய மனித சேவையையும் சர்க்கார் ஜனங்களிடமிருந்து வாங்கினார்கள்.

அப்படி விநியோகித்த அச்சு நோட்டுகளின் ஒரு பகுதியை வரியாகவும் கடனாகவும் திரும்ப வசூலித்தார்கள்.

மேற்படி முறைகளினால் நாட்டில் பணப் பெருக்கம் அதிகமாயிற்று. ஆனால், சாமான் புழக்கம் சுருங்கிற்று. கள்ள மார்க்கெட் ஏற்பட்டது. நாட்டில் சிலர் பெரும் பணக்காரரானார்கள். பலர் வாழ்க்கைக்கு அவசியமான பொருள்களின்றித் திண்டாடினார்கள்.

மொத்தத்தில், சென்ற நாலைந்து வருஷங்களில் இந்தியாவின் பொருளாதாரம் இந்தியாவின் தற்கால நன்மையையோ வருங்கால நன்மையையோ கவனியாமல் கையாளப்பட்டிருக்கிறது.

இத்தகைய பொருளாதாரக் கொள்கையால், தற்சமயம் தேசமக்களிற் பெரும்பாலோர் அடைந்திருக்கும் துன்பங்கள் ஒருபுறமிருக்க, யுத்தம் முடிந்ததும் நிலைமை தலைகீழாக மாறப்போகிறது. பெரிய விபரீதங்கள் வரப்போகின்றன. இந்திய ஜனங்கள் எல்லாரும் எவ்வித வேற்றுமையுமின்றி எல்லையற்ற கஷ்ட நஷ்டங்களை அடையப் போகிறார்கள்.

இதில் வேடிக்கை என்னவென்றால், இப்படி தேசத்துக்குப் பாதகமான பொருளாதாரத் திட்டங்கள் எல்லாம் இந்திய சட்டசபையில் வைக்கப்பட்டு

வெட்டுப் பிரேரணை, ஒட்டெடுத்தல், நிராகரித்தல் முதலிய சடங்குகளுடன் நடத்தி வைக்கப்படுவதுதான்.

## ஒரு நல்ல பயன்

மாகாணங்களில் எவ்வளவோ ஜனங்களுக்கு நன்மை செய்திருக்கக் கூடிய அதிகாரங்களைக் கைவிட்ட காங்கிரஸ் தலைவர்கள், அதற்கு ஒரு வகையில் பரிகாரமாய் மேற்படி உலக மோசடியை மோசடி என்பதாக எடுத்துக் காட்டும் தொண்டை ஒருவாறு செய்து வருகிறார்கள். அதனால் ஒரு நல்ல பயன் நிச்சயமாக ஏற்பட்டிருக்கிறது. காங்கிரஸும் முஸ்லிம் லீக்கும் ஒத்துழைக்க வேண்டிய அவசியமும் அதனால் ஏற்படக் கூடிய நல்ல பயனும் நன்கு வெளியாகி யிருக்கின்றன. இந்தத் தடவை இந்திய சட்டசபை கூடியதிலிருந்து, காங்கிரஸ் அங்கத்தினர்களும் லீக் அங்கத்தினர்களும் ஒத்துழைத்த படியால் மொத்தம் பதின்மூன்று தடவை சர்க்காரை முறியடித்திருக்கிறார்கள்!

பிரிட்டிஷ் சர்க்காரின் போக்கை மாற்றுவதில் மேற்படி தோல்விகளால் ஒன்றும் பிரயோஜனம் இல்லை என்றாலும், வேறொரு வகையில் பிரயோஜனம் இருக்கத்தான் செய்கிறது. அதாவது, காங்கிரஸும் முஸ்லிம் லீக்கும் ஒத்துழைப்பதனால் விளையக்கூடிய நன்மைகளைத் தேசத்தின் முன்னால் எடுத்துக் காட்டுவதே யாகும்.

அதிகாரம் இல்லாத இந்திய சட்டசபையில், காங்கிரஸும் லீக்கும் ஒத்துழைத்த அளவுக்குப் பலன் கிடைத்தது. அதாவது பிரிட்டிஷ் சர்க்காரை வெட்டுப் பிரேரணைகள் மூலமாகப் பதின்மூன்று தடவை தோற்கடிக்க முடிந்தது. அந்த வரையில் உலக மோசடி நெ. 1 சபையின் வண்டவாளத்தை எடுத்துக் காட்ட முடிந்தது.

உண்மையான அதிகாரத்தைக் கைப்பற்றி நடத்தும் விஷயத்தில் காங்கிரஸ்-லீக் ஒத்துழைப்பது என்று ஏற்பட்டால், அப்போது வேறு நல்ல பலன்கள் நிச்சயமாகக் கிடைக்குமல்லவா?

## மோசடி நாசமாக!

காங்கிரஸ்-லீக் ஒற்றுமை முன் எப்போதையும் காட்டிலும் இப்போது அவசியமாய்ப் போயிருக்கிறது. சான்பிரான்ஸிஸ்கோ மகாநாட்டிற்குப் பிரதிநிதிகள் அனுப்பும் விஷயத்தில் எத்தகைய விபத்து நேர்ந்து விடலாம் என்று எல்லாரும் பயந்து கொண்டிருந்தார்களோ, அதுவே நேர்ந்து விட்டது.

உலகப் பாதுகாப்பு மகாநாட்டில் இந்தியாவின் பிரதிநிதிகளாக சர் ஏ. ராமஸ்வாமி முதலியாரும், சர் பெரோஸ்கான் நூனும், சர் வி. டி. கிருஷ்ணமாச்சாரியாரும் ஆஜராகப் போகிறார்கள்.

இவர்கள் ஒருநாளும் இந்தியப் பொது மக்களின் பிரதிநிதிகளாக முடியாது. இவர்கள் யார் எந்தத் தேர்தல் தொகுதிக்கு நின்றாலும், நிச்சயமாக முறியடிக்கப் படுவார்கள். இப்படிப்பட்டவர்கள் இந்தியாவின் பிரதிநிதிகள் என்று உலகப் பாதுகாப்பு மகாநாட்டில் சொல்லிக்கொள்ளப் போகிறார்கள்.

பிரிட்டிஷ் பிரதம மந்திரி சர்ச்சில், "இங்கிலாந்திலுள்ள இரண்டு பெரிய கட்சிகளுக்கும் பிரதிநிதியாக ஈடனையும் ஆட்லியையும் அனுப்புகிறேன்" என்று சொல்கிறார்.

அமெரிக்காவின் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட் டெமாக்ரேடிக் கட்சியைச் சேர்ந்தவரா யிருந்தும், ரிபப்ளிகன் கட்சியைச் சேர்ந்த இருவரைப் பிரதிநிதிகளாக அனுப்பி வைக்கிறார்.

ஆனால், நமது இந்திய சர்க்காரோ, "எங்களுடைய பிரதிநிதிகளைத்தான் அனுப்புவோம்" என்று சொல்லுகிறார்கள். இந்தியாவில் அரசியல் சமரசத்தை ஏற்படுத்தும் உத்தேசம் அவர்களுக்கு இருந்தால், ராஜாஜி சொல்லி யிருப்பதுபோல், இந்திய சட்டசபைக் காங்கிரஸ் கட்சித் தலைவர் ஸ்ரீ புலாபாயையும் லீக் கட்சிக்காக லியாகத் அலி கானையும் பொறுக்கி அனுப்பி யிருக்கலாம். ஆனால், அந்தகைய அரசியல் சமரசம் ஏற்படுத்தும் உத்தேசம் அவர்களுக்குக் கொஞ்சமும் இல்லை. ஐந்து வருஷத்திற்கு முன்னாலேயும் இல்லை; இப்போதும் இல்லை.

இந்த யுத்தம் முடிவதற்குள் இந்தியாவில் அரசியல் மாறுதல் ஏற்பட வேண்டுமானால், உலக மகாநாடுகளில் இந்தியாவின் உண்மையான பிரதிநிதிகள் இடம் பெற வேண்டுமானால் காங்கிரஸும் லீக்கும் உடனே ஒற்றுமைப்பட்டு, சுதந்திரத்திற்காகப் போராடுவது ஒன்றுதான் வழி.

இந்திய சட்ட சபையின் இந்த வருஷத்து நடவடிக்கையிலிருந்து மேற்படி பாடத்தைக் கற்றுக் கொண்டோமானால், கல்லிலிருந்து நார் உரிப்பதுபோல், இந்திய சட்ட சபையிலிருந்தும் ஒரு நன்மையை அடைந்தவர்களாகலாம்.

அதன் பலனாக, இந்த நெ. 1 உலக மோசடியை நாசமாக்குவதற்கும் ஒரு வழி பிறக்கக்கூடுமல்லவா?

# வான சஞ்சாரம்

இசைத் தேன்

தற்காலம் தென்படும் சங்கீத பாணிகளில் 'அரியக்குடி' பாணியைப்போல் வேறெதுவும் அதிகமாய்ப் பரவவில்லை. அதைப் பின்பற்ற ஆசை கொள்ளாதவர்கள் குறைவு. அப்படியே 'இமிடேஷன்' செய்யும் பாடகர்களு மிருக்கிறார்கள். 7உ சென்னையில் பாடிய வி. வி. வைத்யநாதய்யர் அவர்களில் ஒருவர். சாரீரத்தில் நல்ல உதவுபடி. மொத்தத்தில் எல்லாம் மத்யமகால நடை. சங்கராபரணம், சாவேரி, கமாஸ் ராகங்கள் வனப்பாய் அமைந்தன. 'சரோஜ தள நேத்ரி'யில் ஸ்வரமும் கமாஸில் பாடிய உருப்படியும் குறிப்பிடத் தக்கவை. இவருக்கு அமைந் திருக்கும் சாதகமுறையில் அழுத்தத்தை அதிகம் எதிர்பார்க்க முடியாது.

புரோகிராமில் குறிப்பிட்டவர்கள் வராது அவர்களுக்குப் பதிலாக மற்றவர்கள் அநேக கச்சேரிகள் செய்தது சென்ற வாரத்திய ரேடியோ விசேஷம். ஆனால் அப்படி அமைந்த மாற்றுக் கச்சேரிகள் திருப்திகரமாகவே யிருந்தன. 7உ திருச்சியில் என். சரஸ்வதிக் குப் பதிலாக ஆர். சுந்தரி கனிப்பான குரலில் பந்துவராளி, ரீதிகௌளை ராகங்களையும், உருப்படிகளையும் வழங்கியது ரஞ்சகமா யிருந்தது.

8உ காலை திருச்சியிலிருந்து ஜி. கிருஷ்ண மூர்த்தியின் வீணாகானம் முதலில் காதில் விழுந்தது. ராக ஸ்வரூபங்களில் தெளிவும், கமகப் பிடிகளும், மொத்தத்தில் அழுத்தமும் கிருஷ்ணமூர்த்தியின் வீணையில் தென் பட்டன. ஆனந்த பைரவியும் பிலஹரியும் சிறப்பாயிலங்கின.

அன்று அதே நிலையத்தில் பாடிய பாலம் ராமமூர்த்திக்கு உதவு படி மிருந்த நடுத்தர நயசாரீரம். விஜயஸ்ரீ, ஆரபி ராகங்கள் தேர்த்தியாய் வெளிவந்தன.

அன்றிரவு திருச்சியில் சீர்காழி கே. சதா சிவப் பிள்ளையின் முழுக்கச்சேரி பெரும்பா லும் பிர்க்கா வகையாயினும், பாணியும் பாவப் பொழிவும் கொண்டு இலங்கியது. அவர் எடுத்துக் கொண்ட ராகங்களில் கரஹரப்ரியா பெண்மையாயும் பைரவி உருப் படி உருக்கமாயு மிருந்தன.

சென்னையில் பாடிய டி. என். ஞானம் பாளின் கானத்தையும் குறிப்பிடாம லிருக்க முடியாது. சங்கராபரணத்தில் சக்கைப்போடு போட்டார்.

9உ சென்னையில் கேட்ட தேவகோட்டை நாராயணய்யங்காரின் வீணையும், என். ராஜ லக்ஷ்மியின் பாட்டும் உயர்ந்த ரகமா யிருந் தன. முன்னவர் ஞானபாவம், அழுத்தம், தெளிவு இவை கொண்டு ஹரிகாம்போதி, கீரவாணி, வஸந்தா ராகங்களையும் உருப்படி களையும் விளக்கினார். ஸ்ரீ ராகத்தில் அவர் வாசித்த தானமும் கவனத்தைக் கவர்ந்தது.

ராஜலக்ஷ்மிக்கு பாக மறுவற்ற மதுரமான குரல். அத்துடன் தெரிந்ததைக் கச்சிதமாயும் நாஸுக்காயும் வழங்கும் திறமை. இவருக்கு ஸிம்மேந்திர மத்யம ராகத்தில் விசேஷ விருப்பம் போலும். கரஹரப்ரியா சுகபாவம் ததும்பி யிருந்தது.

திருச்சியில் தஞ்சை சீதாலக்ஷ்மிக்குப் பதி லாகப் பாடிய என். சுலோசனாவின் கானமும் எடுப்பா யிருந்தது. இனிமையும் சரளமான உதவுபடியும் கொண்டு அலக்ஷ்யமான ஸ்தாயி சஞ்சாரங்களை ராகங்களில் வாரிவிட்டார். இவர் பாடிய இரண்டு ராகமாலிகைகளோ எல்லாவற்றிற்கும் மேலாயிருந்தன.

10உ சென்னையில் கே. எஸ். நாராயணய் யங்காரின் கோட்டு வாத்யத்துக்குப் பதிலாக பி. எஸ். வேதாசலச் செட்டியார் பாடி ஜமாய்த்து விட்டார். பிர்க்கா முடுக்கிலும், குதிரை நடை வேகத்திலும் ஆபோகியும் ஜகன்மோஹினியும் ஓட, சங்கராபரணத்தில் மாத்திரம் சற்று நிதானமும் விஸ்தாரமும் கண்டன. மேல் பஞ்சமத்துக்கு அப்பாலும் அடிக்கடி துள்ளிவந்தார். இவர் முடுக்குச் சரக்குடன் கல்பாத்தி ராமனாதனின் மிருதங்க மும் வில்வாத்ரி அய்யர் கடமும் சேர்ந்து கடுகு வெடிப்பதுபோல் பொரிந்து தள்ளி விட்டார்கள்.

11உ வஸந்த குமாரி ஸ்ரீநாயகிக்கும் பதி லாக எஸ். வி. எஸ். நாராயணன் பாடினார். வழக்கம்போல் மலயமாருதம், பந்துவராளி, கரஹரப்ரியா ராகங்களும் உருப்படிகளும் ரஞ்சகமா யிருந்தன.

அன்றிரவு திருச்சியில் வெகுநாளாய்க் கேட்கப்படாத பல்லடம் சஞ்சீவிராவின் வேணுகானப் பெரிய கச்சேரி பிரமாதமா யிருந்தது. அவருடைய குழல் நாதப் பெருக் குக்கும் ராகங்களின் அழகுக்கும் பேர் போனது. சரப சாஸ்திரிக்குப் பின், ஒரு தலைமுறைக்கு நிகரற்ற மேதை வித்வானாய் விளங்கியவர். தோடி, காம்போதி, பூர்வி கல்யாணி ராகங்கள் விமரிசையா யிருந்தன. இன்னொரு குழலும் சேர்ந்து அடிக்கடி கேட் டது. ஒருவர் மேலும் மற்றவர் கீழுமாய்ச் சேர்ந்து பாடும் இடங்கள் சுகமா யிருந்தன.

# மிக்க வந்தனம்!

இன்னும் ஒரு இதழுக்குப் பாரதியார் நிதி வரவு ஜாபிதாவைத் தொடர்ந்து கொண்டு போனால், நேயர்களின் பாரதி பக்தியைச் சோதிப்பதாகி விடுமோ என்று அஞ்சி, சென்ற இதழிலேயே பாக்கியிருந்த ஜாபிதா முழுவதையும் (ஏழு பக்கம்) பிரசுரித்து முடிவு செய்துவிடப் பார்த்தேன். அப்படியும் ஒரு சில இனங்கள் தவறி விடப்பட்டுப் பாக்கி நின்று விட்டன.

ஆக மொத்தம் ரூ. 42,000த்துக்கு மேல் நிதி வளர்ந்திருப்பதை நேயர்கள் கவனித்திருப்பார்கள். மேற்படி தொகை, இண்டோ-கம்மெர்ஷியல் பாங்கில் "பாரதியார் ஞாபகார்த்த நிதி" என்ற தனிக் கணக்கில் போடப்பட்டிருக்கிறது.

நிதி மேற்கொண்டு வருவாவதைப் பலவந்தமாய் முட்டுக்கட்டை போட்டு நிறுத்தினேன் என்று சொல்வது மிகையாகாது.

தமிழ் நாட்டில் வேறு எந்த நிதியும் இவ்வளவு சல்லிசாகவும், பிரயத்தனம் இல்லாமலும், உற்சாகமான ஆதரவுடனும் வசூலானதில்லை என்று சொல்வதும் தவறாகாது.

பாரதியாரின் பெருமைக்கும், தமிழ் மக்களிடையே ஏற்பட்டிருக்கும் புத்துணர்ச்சிக்கும் மகத்தான அத்தாட்சி.

"சரிதான்; எதற்காக அத்தகைய உற்சாகத்துக்கு முட்டுக் கட்டை போட வேண்டும்? அரை லட்சமாகவாவது ஆக்கியிருக்கலாமே?" என்று நேயர்கள் கருதலாம்; சிலர் அவ்விதம் எழுதியுமிருக்கிறார்கள்.

தயவு செய்து மன்னிக்க வேண்டும். பணத்தைக் கொண்டு என்ன செய்வதென்பது பற்றிச் சரியான திட்டம் போட்டு, வேலையும் தொடங்குவதற்கு முன்னால், இந்த நிதியை மேலும் பெருக்கிக் கொண்டு போக எனக்குக் கொஞ்சமும் சம்மதமாயில்லை; பெரிதும் கவலையாயிருந்தது என்றுகூடச் சொல்ல வேண்டும்.

மேற்படி தொகைக்குத் தக்கபடி ஞாபகார்த்தத் திட்டம் தயாரித்து, வேலையும் தொடங்கப்பட்ட பிறகு, தமிழ் மக்கள் "இது போதாது; இன்னும் பிரபலமாகச் செய்ய வேண்டும்" என்று கருதினால், நியாயமாய்ச் செய்து கொள்ளட்டும். தற்போதைக்கு, இத்துடன் நிறுத்திக் கொள்ள விரும்புகிறேன்.

ஞாபகச் சின்னத்தைப் பற்றித் திட்டம் அமைத்து வேலை தொடங்குவது பற்றி எட்டயபுரம் அன்பர்களைக் கலந்து ஆலோசிப்பதற்காகவே, நானும் 'கல்கி'' மானேஜரும் செம்பை வைத்திநாத பாகவதரின் கச்சேரியை யொட்டித் திருநெல்வேலி சென்றிருந்தோம். கோவில்பட்டியிலும் திருநெல்வேலியிலும் எட்டயபுரம் அன்பர்களைச் சந்தித்துப் பேசினோம்.

ஆரம்பத்திலேயே நிதிக்கு நன்கொடையனுப்பியதுடன் மேலும் வேண்டிய உதவி செய்வதாக வாக்களித்துள்ள எட்டயபுரம் மகாராஜா அவர்களையும் சந்தித்துப் பேச எண்ணியிருந்தோம். ஆனால், அரண்மனையில் சமீபத்தில் நேர்ந்திருந்த ஒரு துக்க சம்பவத்தினால், அது சாத்தியமில்லாமல் போயிற்று. எனவே, முடிவான திட்டம் தயாரிப்பதையும் கொஞ்சம் தள்ளிப் போட வேண்டியதாயிற்று.

* * *

இதற்கிடையில், அன்பர்கள் சிலர் ஞாபகச் சின்ன நிதியை உபயோகப் படுத்துவது பற்றித் தங்கள் அபிப்பிராயங்களை வெளியிட்டு வருகிறார்கள். இவ்விஷயமாகச் சிந்தனை செய்து யோசனை சொல்லுகிறவர்கள் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆனால், யோசனை சொல்ல முன்வரும் அன்பர்கள் ஒரு விஷயத்தைத் திட்டமாக ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டும். இந்த நிதியானது பாரதியார் பிறந்த எட்டயபுரத்தில் அவருக்கு ஞாபகச் சின்னம் அமைப்பதற்காகவே ஏற்பட்டது. அவ்விதம் விண்ணப்பம் செய்து விளம்பரப்படுத்தித்தான் இந்தத் தொகை முழுவதும் வசூலிக்கப்பட்டிருக்கிறது. வேறு இடங்களில்,—அதாவது பாரதியார் வசித்த சென்னை, புதுச்சேரி, திருநெல்வேலி முதலிய இடங்களில் — பாரதியாருக்கு ஞாபகச் சின்னங்கள் அமைப்பது அவசியமானாலும், இந்த நிதியை அந்தக் காரியங்களுக்கு உபயோகப்படுத்த முடியாது. இது விஷயத்தை மனதில் வைத்துக்கொண்டு எந்த யோசனையையும் சொல்லும்படியாக அன்பர்களைக் கேட்டுக் கொள்கிறேன்.

திருநெல்வேலியில் 25-2-45ல் கூடிய திருநெல்வேலி ஜில்லாக் காங்கிரஸ் சங்கக் கூட்டத்தில் பின்வரும் தீர்மானங்கள் நிறைவேறியதாக அறிவிக்கப் பட்டிருக்கிறது :

"1. அமரகவி சுப்ரமண்ய பாரதியார் பிறந்து வளர்ந்த எட்டயபுரத்தில், அவரது ஞாபகார்த்தமாக ஏற்படுத்தப் போகும் வாசகசாலைக்குக் கோரிய தேவைக்கு அதிகமாக நன்கொடை கொடுத்து உதவிய நன்கொடையாளர்களை இச்சங்கம் பாராட்டுகிறது.

2. எட்டயபுரத்தில் மேற்படி ஞாபகார்த்தத்திற்குச் செலவு செய்யப் படுவதோடு, திருநெல்வேலியிலும் பாரதியார் பெயராலேயே ஒரு நகர மண்டபம் மேற்படி நிதியில் ஒரு பகுதியைச் செலவு செய்து கட்டி, அப்படிக் கட்டப்படும் கட்டடத்தை வாடகைக்கு விட்டு, அதன் மூலம் கிடைக்கும் வருமானத்தைப் பாரதியார் குடும்பத்துக்கு வருஷா வருஷம் கொடுத்து உதவுவதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்யும்படி இச்சங்கம் 'கல்கி' ஆசிரியர் ஸ்ரீ ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறது."

இவ்வளவு சிரத்தை எடுத்துக்கொண்டு நிதி விஷயமாக யோசனை கூறியுள்ள காங்கிரஸ் சங்க அங்கத்தினர்களுக்கு நன்றி கூறுகிறேன். ஆனால் ஏற்கனவே சொல்லியது போல, இந்த நிதியின் பணத்தைத் திருநெல்வேலியில் கட்டடம் கட்ட உபயோகப்படுத்துவது இயலாத காரியம். அவ்விதம் செய்ய எனக்கும் அதிகாரம் இல்லை; இந்த நிதியை நிர்வகிக்கப் போகும் கமிட்டியாருக்கும் அந்த உரிமை இராது.

ஆனால், மேற்படி தீர்மானத்தின் கடைசிப் பகுதியை, அதாவது பாரதியாரின் குடும்பத்துக்கு உதவி செய்ய வேண்டும் என்ற நோக்கத்தை மனப்பூர்வமாக வரவேற்கிறேன். காலஞ் சென்ற பெரியார்களைப் போற்றுவதற்காகக் கல்லாலும் சுண்ணாம்பாலும் கட்டிடங்களை எழுப்பிவிட்டு, அவர்களுடைய குடும்பத்தாரை நிராதரவாய் விடுவது தெய்வத்துக்கே சம்மதமாய் இராது. முக்கியமாக, ஸ்ரீ பாரதியாரின் மனைவியார் தற்சமயம் ஏறக்குறைய நிராதரவான நிலைமையில் இருப்பதாக அறிகிறேன். இந்த நிதியின் ஒரு பகுதியை ஒதுக்கி வைத்து, அதில் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு பாரதியாரின் வாழ்க்கைத் துணைவிக்கு அவருடைய ஜீவிய காலம் வரையில் உதவி செய்யலாமென்று தமிழ்ப் பொது மக்கள் அபிப்பிராயப்படும் பட்சத்தில் எனக்கு அதில் சிறிதும் ஆட்சேபம் இல்லை. இது விஷயமாக, அன்பர்களின் அபிப்பிராயத்தை எதிர்பார்க்கிறேன்.

# வட்ட மேஜை

திருவரங்கம்,
"கல்கி" பத்திரிகாசிரியர் 11—3—45.
அவர்களுக்கு

அன்புள்ள ஐயா,

இந்த வாரக் கல்கி இதழ் அட்டையை வழக்கம்போல அரசியல் துறையிலோ அல்லது வேறு எந்தத் துறையிலோ பொதுமக்களுடன் தொடர்பு கொண்டுள்ள பெரிய மனிதர்களுள் ஒருவர் அலங்கரிக்காமல், கும்பகோணம் மகாமகத்திற்குச் சென்று புண்ணியம் சம்பாதித்துக் கொண்ட பெரிய மனிதர்கள் அலங்கரிக்கிறார்கள். ரயில்வேக்காரர்களை ஏமாற்றிவிட்டு இத்தனை ஆயிரம் மக்கள் பக்தி சிரத்தையுடன் வந்திருந்ததைக் குறித்து மகிழ்ச்சியுடனும் பெருமையுடனும் குறிப்பிடுகிறீர்கள். அத்துடன் தாங்கள் நிறுத்திக் கொள்ளவில்லை. சுயமரியாதைக்காரர்களைப் பார்த்து "ஏ, சுயமரியாதைக்காரர்களே! நீங்கள் இருபது வருடகாலமாகத் தேர் திருவிழா கூடாதென்று பிரசாரம் செய்து வருகிறீர்களே! இந்தப் படத்தைப் பாருங்கள். பார்த்தீர்களா உங்களுடைய பிரசாரத்திற்கு இருக்கும் மதிப்பை! ஏன் இப்படி வீண் பிரசாரம் செய்கிறீர்கள்? உங்கள் பேச்சை யார் கேட்கிறார்கள்? வேறு வேலை ஏதாவது இருந்தால் செய்யுங்கள்" என்று புத்திமதியும் கூறியிருக்கிறீர்கள்.

நல்லது. உங்களிடம் சில சந்தேகங்கள் கேட்க விரும்புகிறேன். மகா மகத்திற்கும் மக்களுடைய கடவுள் பக்திக்கும் சம்பந்தம் உண்டா? மனிதன் செய்த பாபங்களெல்லாம் மகாமகக் குளத்தில் முழுகினால் அவனை விட்டு நீங்கிப் போகுமா? முடிச்சுமாறிகள், போக்கிரிகள், கொலைபாதகர்கள், பிறரை வஞ்சித்துப் பிறர் உழைப்பில் உடலை வளர்ப்பவர்கள் இவர்களெல்லாம் மகாமகத்தன்று கும்பகோணத்திற்குச் சென்று அங்குள்ள குளத்தில் முழுகிவிட்டால் கடவுள் அப்படிப்பட்டவர்களுக்கு அருள் பாலிப்பாரா? மோக்ஷத்தில் இடமளிப்பாரா? அளிப்பாரானால் அப்படிப்பட்டவர்கள் நாட்டில் பெருகுவதற்குக் கடவுள் இடமளிக்கிறார் என்றுதானே பொருள்? அப்படி அருள்பாலிக்க மாட்டாரென்றால் வேறு எந்தப் பலனைக் கோரி அந்தக் குளத்தில் மூழ்க வேண்டும்? அக அழுக்கை அந்த நீர் போக்க வல்லதா? அல்லது புற அழுக்கைத்தான் போக்க வல்லதா? இத்தனை ஆயிரம் பேர் எத்தனையோ மகாமகங்களாக அந்தக் குளத்தில் மூழ்கி எம்பிரானைச் சேவித்தனரே, அதனால் நாம் அடைந்த பலன் என்ன? நாட்டின் பொருளாதார நிலை உயர்ந்ததா? அல்லது நூற்றுக்குத் தொண்ணூறு பேராக இருந்த தற்குறிகள் திடீரென்று 100-க்கு 10 பேராகக் குறைந்து விட்டார்களா? அல்லது நம் திரிபுரம் எரித்த பெம்மான், சர்ச்சில் துரையின் கனவில் தோன்றி, "இந்தியாவில் உள்ளவர்களெல்லாம் எமது பக்தர்கள். அவர்களுடைய நாட்டை—என் பக்தர்களுடைய நாட்டை—அவர்களுக்குக் கொடுக்காமல் நீ அக்கிரமமாக ஆதிக்கம் செலுத்திக்கொண்டா இருக்கிறாய்? இதோ. இப்பொழுதே அவர்களுக்கு சுயராஜ்யம் கொடுத்தால் போச்சு; இல்லையேல் உன்னை என் நெற்றிக் கண்ணால் சுட்டு எரித்துவிடுவேன்!" என்று சொன்னாரா?

அன்புடையீர்!

சுயமரியாதைக்காரர்கள் மேற்படி படத்தைப் பார்த்திருப்பார்கள். பார்த்துவிட்டுத் தங்களைப்போல் மகிழ்ச்சி அடைந்திருக்க மாட்டார்கள். பரிதாபப் பட்டிருப்பார்கள்! குழந்தையைத் தவறவிட்டு விட்டுப் பித்துப் பிடித்தவன்போல் அலையும் தாய்மார்களையும், தாயைவிட்டுத் தவறிச் சென்று வருவோரையும் போவோரையும் உற்று உற்றுப் பார்த்து விட்டு ஏமாந்து போய்க் கதறிக் கண்ணீர் விடும் குழந்தைகளையும், "ஐயையோ! கழுத்தில் போட்டிருந்த சங்கிலியைக் காணோமே!" என்று பதைத்துப் போய் விதிட்டலையும் பெண்மணிகளையும் கண்டிருப்பர்; கண்டு உள்ளம் நொந்து போயிருப்பர். நண்பர்களைக் கண்டால்கூடப் பேச வெட்கப்படும் இளம் பெண்கள் கூட்டத்தில் முரடர்களிடையில் அகப்பட்டு நசுக்குண்டு தவிப்பதைப் பார்த்துப் பரிதாபப் பட்டிருப்பார்கள். நிரபராதிகளைப் போலீஸார் சந்தேகப்பட்டு அவர்களைப் பிடித்து உதை உதை என்று உதைப்பதையும் பார்த்திருப்பார்கள். மகாமகத்திற்கு வந்திருந்தவர்கள் புதுப்புதுத் தொற்று வியாதிகளை ஊருக்குக் கொண்டு போவதுடன் அது பகவான் அனுக்கிரகம் என்று திருப்தி அடைவதையும் கண்டு, "காசு பணம் செலவழித்துக் கஷ்டப்பட்டு வியாதி வாங்கிக் கொண்டு வரும் பேரறிஞர்கள் பிறந்துள்ள புண்ணிய பூமியில் அல்லவா நாமும் பிறந்துள்ளோம்!" என்று எண்ணி வெட்கப்பட்டிருப்பார்கள்.

ஆனால் அன்பரே, தாங்கள் கூறியுள்ள புத்திமதியை ஏற்றுக்கொள்ள மாட்டார்கள். கோரிய பலன் இன்னும் கிட்டவில்லையே என்ற காரணத்திற்காகச் சுயமரியாதைக்காரர்கள் தங்கள் கடமையைச் செய்யத் தவறமாட்டார்கள். எத்தனை ஆயிரம் பேர் எதிர்த்தாலும் செய்யவேண்டிய கடமையைச் செய்ய அவர்கள் கொஞ்சம்கூடப் பின்வாங்க மாட்டார்கள்.

சுயமரியாதைக்காரர்களுக்குப் புத்தி சொன்னீர்களே, காங்கிரஸ்காரர்களுக்கும் கொஞ்சம் சொல்லுங்கள்! காங்கிரஸ் மகாசபையும் தான் ஏற்பட்டு அறுபது வருடகாலம் ஆகப் போகிறது. பூரண சுதந்திரத்திற்காகக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தே கிட்டத்தட்ட இருபத்தைந்து வருடங்கள் ஆகின்றன. எவ்வளவோ முறைகளையும் கையாண்டு பார்த்தாகி விட்டது. இவ்வளவு வருடங்கள் செய்த கிளர்ச்சி வீண்தானே? அப்படியானால் சுதந்திரத்திற்காக இன்னும் கிளர்ச்சி செய்வது தப்புத்தானே? அதை நிறுத்தும்படி அவர்களுக்குப் புத்தி சொல்லுங்கள்.

கல்கியாரே! கடைசியாக உங்களுக்கு ஒரு வார்த்தை சொல்லிவிடுகிறேன். நாம் விரும்புவது நம் நாடு. நம் நாட்டிலே நம் மக்கள் இன்னும் பழைய காட்டுமிராண்டிகளின் காலத்திலேயே இருக்கிறார்கள். நூற்றுக்குத் தொண்ணூறு பேர்கள் அஞ்ஞானக் குன்றுகளாக விளங்குகிறார்கள். நம் நாட்டை முற்போக்குக்குக் கொண்டுவர வேண்டும். நாம் எல்லோரும் சேர்ந்து நாட்டைச் சீர்திருத்தினால் சுதந்திரம் நம்மைத் தேடி ஓடிவரும். அதைச் செய்யாமல் மக்களை இன்னும் பழமையிலேயே மோகம் கொள்ளும்படி செய்துவிட்டு, இங்கிலாந்து நோக்கிக் கூச்சல் போட்டுக் கொண்டிருந்தால் நிச்சயமாகச்

சொல்லுகிறேன்: சுதந்திரம் வராது. தப்பித் தவறி வந்தாலும் அது நிலைக்காது.

இப்படிக்கு,

ஆ. வி. ராகவன்,

மாணவன், அர்ச் ஆசையப்பர் கல்லூரி.

[உணர்ச்சி ததும்ப எழுதப்பட்டிருக்கும் மேற்படி கடிதத்தை நாம் மகிழ்ச்சியுடனும், பெருமையுடனும் பிரசுரிக்கிறோம். அடைப்பட விளக்கத்தில் ஏதோ வேடிக்கையாக எழுதிய ஒரு வாக்கியம் இவ்வளவு தூரம் ஒரு மாணவருடைய சிந்தனையையும் உணர்ச்சியையும் தூண்டி விட்டது பற்றி மகிழ்ச்சியும் பெருமையும் கொள்கிறோம்.

குறிப்பிட்ட தினத்தில் மகாமகக் குளத்தில் ஸ்நானம் செய்வதால் எல்லாப் பாவங்களையும் போக்கிக் கொள்ளலாம் என்று நாம் ஒருநாளும் நம்பவில்லை. இத்தமாதிரி மூடக் குருட்டு நம்பிக்கைகள் போகவேண்டும் என்பதில் சுயமரியாதைக்காரருக்குள்ள ஆத்திரம் நமக்கும் இருக்கிறது. அவர்களுடைய இருபது வருஷப் பிரசாரத்தினால் இது விஷயத்தில் ஏதாவது பயன் ஏற்பட்டிருந்தால், அதாவது மகாமகக் கூட்டம் குறைந்துபோயிருந்தால், நமக்கு எவ்வளவோ சந்தோஷமாயிருந்திருக்கும்.

நல்ல காரியங்களில் எவ்வளவு தடவை தோல்வியடைந்தாலும் சலியாமல் மீண்டும் முயற்சி செய்ய வேண்டியதுதான் என்பதை நாம் ஒப்புக் கொள்கிறோம்.

ஆனால், மூட நம்பிக்கைகளை ஒழிப்பதற்கு சுயமரியாதைக்காரர் கையாளும் முறைகளை நாம் ஒப்புக்கொள்ளவில்லை. அம்முறைகளினால் உத்தேசித்த பலன் கிட்டாதது மன்றி, சமூகத்தில் மூட நம்பிக்கைகள் இன்னும் அதிக உரம் பெறுகின்றனவோ என்றும் நாம் சந்தேகிக்கிறோம்.

தெய்வம், கோவில், திருவிழா ஆகியவைகளை நமது நாட்டு மக்களின் உள்ளத்திலிருந்து ஒருநாளும் பெயர்க்க முடியாது என்பது நமது அபிப்பிராயம்.

இவற்றை வைத்துக்கொண்டு, ஆனால் அவற்றில் படிந்து கிடக்கும் மூடநம்பிக்கை முதலிய தீமைகளை யொழிக்க முயலுவதுதான் பயன் தரும். இத்தகைய முயற்சிகளைச் செய்வதற்கான மார்க்கங்களைச் சுவாமி விவேகானந்தர் முதலிய பெரியார்கள் நமக்குக் காட்டியிருக்கிறார்கள்.

கடவுள் உலகத்தில் நடக்கும் அக்கிரமங்களை யெல்லாம், — தம் பேரால் நடக்கும் அக்கிரமங்களைக் கூட, — என் பொறுத்துக் கொண்டிருக்கிறார் என்பது ரொம்பவும் பெரிய விஷயம். அதை இந்தப் பத்தியில் சர்ச்சை செய்வதற்கில்லை. — ஆசிரியர்.]

அயல் நாட்டுப் பிரமுகர்கள் — 3.

# வான் ருன்ஸ்டெட்

இந்த மகா யுத்தம் ஆரம்பமானதிலிருந்து, எத்தனையோ ஜெர்மன் இராணுவத் தலைவர்கள் கொஞ்ச நாள் பிரபலமான புகழுடன் விளங்கித் திடீரென்று இருந்த இடம் தெரியாமல் மங்கிப் போனார்கள். இவ்வாறு வான் பிராஷிட்ச், வான் பாக், கெயிடல், லீப், லிஸ்ட் முதலியவர்கள் அஞ்ஞாதவாசம் அடைந்தார்கள். வேலை போகாதவர்கள் போர்க்களத்தில் உயிரையே இழந்தார்கள். வட ஆப்பிரிக்காவில் அற்புத வெற்றிகளை அடைந்த ரோமல் பிரான்ஸ் போர்க்களத்தில் உயிர் துறந்தார்.



ஆனால், இதுவரை பதவி, உயிர் — இரண்டையும் காப்பாற்றிக் கொண்டு வரும் ஜெர்மன் இராணுவத் தலைவர் ஒருவர் உண்டு. அவர்தான் வான் ருன்ஸ்டெட். ஜெர்மன் மின்னல் தாக்குதல் தந்திரத்தின் மூலகாரண புருஷர்.

சென்ற வருஷக் கடைசியில் ருன்ஸ்டெட் தமது ராணுவ மேதையினால் உலகத்தைக் கதிகலங்க அடித்தார். ஜெர்மனியின் எல்லைப்புறம்வரை வந்து சூழ்ந்துவிட்ட பிரிட்டிஷ் - அமெரிக்கப் படைகளைத் திருப்பித் தாக்கி அவற்றின் அணிவகுப்பைப் பிளந்து கொண்டு வெகு தூரம் பெல்ஜியத்தில் முன்னேறிவிட்டார். இந்தப் பதில் தாக்குதல் ராணுவச் சரித்திரத்திலேயே மிகவும் அதிசயமான சம்பவம் என்று உலகம் வியந்தது. மறுபடியும், சென்ற வாரத்தில் ருன்ஸ்டெட் ரைன் நதிப் பிரதேசத்தில் நேசப் படைகளைத் திருப்பித் தாக்க ஆரம்பித்திருப்பதாகக் கடைசியாக வந்த செய்தி கூறுகிறது.

தோற்கும் கட்சியைச் சேர்ந்த வீரர்களாக இந்திரஜித், கர்ணன் முதலியவர்கள் நமது புராணங்களில் புகழ் பெற்று விளங்குவதுபோல், வான் ருன்ஸ்டெட் தற்காலச் சரித்திரத்தில் தோற்கும் கட்சி வீரராகப் பிரசித்தி பெறுவார் என்று தோன்றுகிறது.

# சிவகாமியின் சபதம்



ஐந்தாம் அத்தியாயம்

## காஞ்சி ஒற்றன்

**வா**தாபிச் சக்கரவர்த்தி, குண்டோதரன் விஷயத்தில் நன்கு கவனம் செலுத்தாமலே "இவனை யானையின் காலால் இடறச் செய்யுங்கள்!" என்று கட்டளையிட்டபோது, அருகிலிருந்த வாதாபியின் ஒற்றர் தலைவன் "அரசே! இவனைக் கொஞ்சம் விசாரணை செய்துவிட்டுப் பிறகு தண்டனை நிறைவேற்றுவது நலம்" என்று தெரிவித்துக் கொண்டான்.

"ஆம், ஆம், ஏதோ கவனமாகச் சொல்லிவிட்டேன். அவனை இப்படி அருகில் கொண்டு வாருங்கள்" என்று புலிகேசி கட்டளையிடவும், குண்டோதரன் அருகில் கொண்டு வந்து நிறுத்தப்பட்டான்.

"அடே, நீ யார்? என்ன வேலையாகக் கிளம்பினாய்? உண்மையைச் சொல்!" என்று, புலிகேசி கேட்போர் உள்ளம் நடுங்கும் அதிகாரத் தொனியில் வினவினான்.

வாதாபி மன்னன் சென்ற பதினெட்டு மாத காலத்தில் தமிழ் பாஷை நன்றாய்ப் பேசவும், பேசியதைத் தெரிந்து கொள்ளவும் பயின்றிருந்தான் என்பதை இந்த இடத்தில் நாம் குறிப்பிட வேண்டும். ஏற்கெனவே வாதாபி ராஜ்யத்தில் வழங்கிய பாஷையானது பாதி தமிழ்ச் சொற்களைக் கொண்டிருந்தபடியால், தமிழ் பாஷையைப் பயிலும் விஷயத்தில் புலிகேசிக்கு அதிக சிரமம் ஏற்படவில்லை.

புலிகேசி கேட்ட கேள்விக்கு விடையாகக் குண்டோதரன் "ஐயா! நான் என் அம்மாவுடைய பிள்ளை. கொள்ளிடத்துக்கு அக்கரையில் திருவெண்காட்டுக்குப் போகலாம் என்று கிளம்பினேன். திருவெண்காட்டு வைத்தியரிடமிருந்து மருந்து வாங்கிக் கொண்டு வருவதற்காகப் போகிறேன்" என்றான்.

"எதற்காகடா மருந்து? உனக்கு என்ன கேடு வந்து விட்டது!" என்று புலிகேசி கேட்டதும், குண்டோதரன் பயத்தினால் நடுங்கியவன் போலப் பாசாங்கு செய்து, "எனக்கு இல்லை; எங்க அம்மாவுக்கு மருந்து. எங்க அம்மா, அவல் இடிக்கும்போது உரலை விழுங்கி விட்டாள். அதற்காக" என்றான்.

இந்த விடை அங்கிருந்தவர்கள் சிலருக்குச் சிரிப்பை உண்டாக்கிற்று. புலிகேசியின் முகத்திலும் இலேசான புன்னகை தோன்றியது.

"என்னடா உளறுகிறாய்? உங்க அம்மா உரலை விழுங்கினாளா? நிஜத்தைச் சொல்!" என்று அதட்டிக் கேட்டான் புலிகேசி.

"இல்லை, உரலை விழுங்கவில்லை. உலக்கையைத்தான் விழுங்கினாள்!" என்றான் அதிக நடுக்கத்துடன்.

**கல்கி**

"உரலை விழுங்கினாளா, உலக்கையை விழுங்கினாளா? நிஜத்தைச் சொல்!" என்று

கோபமான குரலில் கர்ஜித்தான் புலிகேசி.

"இல்லை, இல்லை! உரல் எங்க அம்மாவை விழுங்கி விட்டது!" என்றான் குண்டோதரன்.

"அடே, என்னிடம் விளையாடுகிறாயா? — உன்னை என்ன செய்வேன், தெரியுமா?"

"ஐயா! மன்னிக்க வேண்டும். உங்களை எல்லாம் பார்த்தால் எனக்கு ரொம்ப பயமாய் இருக்கிறது. அதனால் மனதிலே ஒன்று இருக்க, நாக்கு எதையோ சொல்லுகிறது."

"இப்போது பயம் இல்லாமல் நிதானித்து உள்ளதை உள்ளபடி சொல்லு!"

"எங்க அம்மா அவல் இடித்த போது உலக்கை தவறிக் கையில் விழுந்து விட்டது. அதனால் காயமாகி விட்டது. காயத்துக்கு மருந்து வாங்குவதற்காகத் திருவெண்காட்டு நமசிவாய வைத்தியரிடம் போகிறேன்."

"இவ்வளவுதானே, வேறு ஒன்றும் இல்லையே? சத்தியமாகச் சொல்!"

"ஆம், ஐயா! சத்தியமாகத்தான் சொல்லுகிறேன். உலக்கைக்குத்தான் காயம் பட்டது!" என்று குண்டோதரன் உளறினான்.

வாதாபி சக்கரவர்த்திக்குத் திடீரென்று சிரிப்பு பீறிக்கொண்டு வந்தது. சற்று நேரம் விழுந்து விழுந்து சிரித்து விட்டு, பக்கத்திலிருந்த ஒற்றர் தலைவனைப் பார்த்து "இந்தப் பைத்தியக்காரனை, மேலே என்ன செய்கிறது?" என்று கேட்டான்.

"சக்கரவர்த்தி! இவன் பைத்தியக்காரன் அல்ல. காரியப் பைத்தியமாகத் தோன்றுகிறது. ரொம்ப நெஞ்சழுத்தம் உள்ளவனாகக் காணுகிறான். இவனை வேறு விதத்தில் பரிசோதிக்க வேண்டும்" என்றான் வாதாபியின் ஒற்றர் தலைவன்.

இது காதில் விழுந்ததும், குண்டோதரனைப் பிடித்துக் கொண்டு வந்திருந்த வீரர்களின் தலைவன் சக்கரவர்த்தியின் அருகில் நெருங்கி, "சத்தியாஸ்ரயா! இதோ இந்த ஓலை இவனைச் சோதித்த போது அகப்பட்டது" என்பதாகச் சொல்லிக் கொடுத்தான்.

புலிகேசி அதை வாங்கி முன் போலவே அங்கிருந்த விகிதனிடம் கொடுக்க, அவன் ஓலையைப் படிக்கலானான்:

"மீனக் கொடியோனுக்கு ரிஷபக் கொடியோன் விடுத்த நிருபம். வடதேசத்துப் புலி உம்மைக் காண்பதற்காகக் கொள்ளிட நதிக்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. புலியின் ஆசை வார்த்தைகளில் மயங்கிவிட வேண்டாம். சேற்றில் அகப்பட்டுக்கொண்ட புலி, பிராமணனைத் தோத்திரம் செய்து ஏமாற்றிய கதை ஞாபகம் இருக்கட்டும். காஞ்சி ரிஷபத்தை வாதாபிப் புலியினால் ஒன்றும் செய்ய முடியாது என்பதை உறுதியாக நம்பவும். புலி சேற்றிலேயே கிடந்து பட்டினியால் செத்த பிறகு, காஞ்சி ரிஷபத்துக்கும் மதுரையின் மானுக்கும் நீடித்த உறவு ஏற்பட இடம் இருக்கிறது. ஆனால், புலியின் பசியைத் தீர்க்க உதவி செய்தால் அது மானுக்குத்தான் முடிவில் ஆபத்தாக முடியும். இதையும் மனசில் வைத்துக் கொண்டு உசிதப்படி நடந்து கொள்ளவும்."

இதை விகிதன் படித்து வரும் போதே, வாதாபிச் சக்கரவர்த்திக்கு அதன் உட்கருத்து இன்னதென்று விளங்கி விட்டது. கோபத்தினால் அவனுடைய உடம்பெல்லாம் நடுங்கிற்று. பற்களை நற நற வென்று கடித்துக் கொண்ட சத்தம், அங்கு இருந்தவர்கள் எல்லாரையும் நடுங்கச் செய்தது.

குண்டோதரன், முன்னால் 'உரல் உலக்கை' என்றெல்லாம் பேசியதையும், அதைக் கேட்டுத் தான் சிரித்ததையும் நினைத்தபோது உண்டான அவமான உணர்ச்சியானது புலிகேசியின் கோபத்திற்கு இன்னும் தூபம் போட்டது.

"அடே, ஒற்றா! வாதாபிப் புலிகேசியுடனா விளையாடத் துணிந்தாய்? — கொண்டு போங்கள் இவனை! இவனுடைய கண்களைப் பிடுங்கி விட்டு, கழுத்தை வெட்டிக் கழுகு

களுக்குப் போடுங்கள்!'' என்று கர்ஜித்தான்.

இப்படிக் குரூரமான ஆக்ஞையிட்ட போது, புலிகேசியின் தழல்போல் சிவந்த கண்கள் குண்டோதரனை உற்று நோக்கின. அப்படி நோக்கிய கண்களில் திடீரென்று கோபம் தணிந்து, அளவில்லாத ஆச்சரியத்தின் அறிகுறி தென்பட்டது.

ஏனெனில், குண்டோதரனை வீரர்கள் இழுத்துக் கொண்டு போக முயன்றபோது, அவனுடைய தலையானது விசித்திரமான சில சமிக்ஞைகளைச் செய்தது. சற்று உற்றுக் கவனித்தால், அந்த சமிக்ஞைகள் ஸ்வஸ்திக*ச் சின்னத்தின் கோலமாக அமைந்தன என்பது தெரிய வந்திருக்கும்.

புலிகேசிக்கு இது தெரிய வந்தது. அதனாலேதான் அவனுடைய கண்களில் அத்தகைய வியப்புக் குறி தோன்றிற்று.

''நில்லுங்கள்!'' என்று புலிகேசி மறுபடியும் கூவினான். ''இந்த ஒற்றனிடம் நான் இன்னும் சில விஷயங்கள் கேட்க வேண்டும். இவனை இங்கே தனியாக விட்டு விட்டு மற்ற எல்லாரும் கூடாரத்துக்கு வெளியே போங்கள்'' என்று கட்டளை யிட்டான்.

## ஆறாம் அத்தியாயம்

# பிக்ஷுவின் செய்தி

சக்கரவர்த்தியின் கட்டளையைக் கேட்டதும் கூடாரத்திலிருந்த பலர் உடனே வெளியேறினார்கள். ஒற்றர் தலைவன் முதலிய சிலர் வெளியேறுவதற்குத் தயங்கியபோது புலிகேசி அவர்களைக் கோபத்துடன் பார்த்து, ''போங்கள்!'' என்று சொல்லவே, அவர்களும் போய் விட்டார்கள். கூடாரத்தில் புலிகேசி, குண்டோதரன் ஆகிய இருவருமே மிஞ்சினார்கள்.

புலிகேசி சாந்தமான குரலில், ''அப்பா, நீ யார்? யாரிடமிருந்து வந்தாய்? எனக்கு அந்தரங்கச் செய்தி ஏதேனும் கொண்டு வந்திருக்கிறாயா?'' என்று கேட்டான்.

''ஆம், சத்தியாஸ்ரயா! பிக்ஷுவிடமிருந்து தான் வந்தேன். சேதி கொண்டு வந்திருக்கிறேன்'' என்றான் குண்டோதரன்.

''ஆஹா, அப்படியா!'' என்று புலிகேசி சிம்மாசனத்திலிருந்து துள்ளிக் குதித்தெழுந்தான்.

''சீக்கிரம் சொல்லு! பிக்ஷு எங்கே இருக்கிறார்? சௌக்கியமாய் இருக்கிறாரா? ஏன் இத்தனை நாளாகத் தகவல் ஒன்றும் அனுப்பவில்லை? உன்னிடம் என்ன சொல்லி அனுப்பினார்?'' என்று புலிகேசி சரமாரியாய்க் கேள்விகளை அடுக்கினான்.

குண்டோதரனுடைய கண்களில் திடீரென்று எங்கிருந்தோ கண்ணீர் பெருகிற்று. விம்முகின்ற குரலில், ''சத்தியாஸ்ரயா! என் குருநாதர் காஞ்சியில் பல்லவனுடைய சிறைச்சாலையில் இருக்கிறார்'' என்றதும், புலிகேசி ''ஆஹா! நான் உயிரோடிருக்கும் போது, பிக்ஷு சிறையில் இருப்பதா? என்ன அவமானம்! காவித்துணி அணிந்த பிக்ஷுவைச் சிறையில் இடும்படி மகேந்திர பல்லவன் அவ்வளவு நீசனாகி விட்டானா?'' என்று சீறினான்.

பிறகு, ''இருக்கட்டும்; எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லு. பிக்ஷு எப்படிச் சிறைப்பட்டார்? நீ எப்போது அவரைப் பார்த்தாய்? என்ன சேதி சொல்லி யனுப்பினார்?'' என்று கேட்டான்.

குண்டோதரன் சொன்னான்:—''ஐயா! ஏழு நாளைக்கு முன்பு சென்ற வெள்ளிக்கிழமைதான அவரைப் பார்த்தேன். மதத் துரோகியும் குருத்ரோகியும் பாஷாண்டியுமான

* ஸ்வஸ்திகச் சின்னம் என்றதும், வாசகர்களுக்கு ஜெர்மனியின் தற்சமயம் நாஜிக் கட்சியின் சின்னமாக ஸ்வஸ்திகம் விளங்குவது ஞாபகம் வரும். ஆனால், ஹிட்லரைப் பார்த்துப் பூர்விக இந்தியர்கள் காப்பி யடிக்கவில்லை! அந்த நாளில் புத்தர்களும் ஜைனர்களும் சில சமயங்களில் ஸ்வஸ்திகச் சின்னத்தை உபயோகப்படுத்தினார்கள் என்பது சரித்திர ஆதாரம் பெற்ற விஷயம்.

மகேந்திர பல்லவன் தனது இராஜ்யத்திலுள்ள புத்த பிக்ஷுக்களை யெல்லாம் பிடித்து அடைத்து வைத்திருக்கும் சுரங்க மண்டபத்துக்குள்ளே அவரைப் பார்த்தேன். மன்னர் மன்ன! முதலில் பிக்ஷு சொல்லியனுப்பிய சேதியைத் தங்களிடம் சொல்லி விடுகிறேன். அதுவரையில் இந்தப் பாழும் உயிருக்கு எதுவும் வந்துவிடக் கூடாதே யென்று எவ்வளவோ கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன். ஆகா! சென்ற ஏழு நாளில் இந்த ஏழைக்கு எவ்வளவு ஆபத்துக்கள் வந்தன, தெரியுமா? என் குருநாதருடைய செய்தியைத் தங்களிடம் சொல்லி விட்டேனானால், அப்புறம் இந்த அற்ப உயிருக்கு என்ன நேர்ந்தாலும் கவலைப்பட மாட்டேன். தங்களை எப்படியாவது நேருக்கு நேர் தரிசித்து விட வேண்டுமென்று என்ன வெல்லாமோ யுக்தி செய்தேன். தங்களைத் தரிசிக்க வேறு விதமாய் முடியாதென்று எண்ணித்தான் கடைசியில், காஞ்சியிலிருந்து வந்த நமது வீரர்களிடம் வேண்டுமென்றே அகப்பட்டுக் கொண்டேன். பிரபு! பிக்ஷு தங்களிடம் சொல்லும்படியாக முக்கியமாய் நாலு செய்திகளைச் சொல்லியிருக்கிறார். அவற்றைக் கேளுங்கள்!" என்ற பீடிகையுடன் குண்டோதரன் செய்திகளை வரிசைக் கிரமமாகக் கூறினான். அவை வருமாறு:—



முதலாவது செய்தி, "மதுரைப் பாண்டியனை நம்பவேண்டாம்" என்பது. இந்த ஜயந்த வர்ம பாண்டியன்தான் பிக்ஷுவை மதுரையில் சிறைப் பிடித்து வைத்திருந்தானாம். அச்சமயம், மகேந்திர பல்லவனுக்கும் ஜயந்தவர்மனுக்கும் ஏதேதோ அந்தரங்க ஓலைப் போக்குவரவு நடந்ததாம். அவர்கள் இரண்டு பேரும் சேர்ந்து ஏதோ துரோகமாகச் சூழ்ச்சிசெய்திருக்க வேண்டுமென்று பிக்ஷு கருதுகிறபடியால், பாண்டியனிடம் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்ள வேண்டியது. அவனை முழுதும் நம்பி எந்தக் காரியத்திலும் இறங்கக் கூடாது.

இரண்டாவது செய்தி கங்க நாட்டுத் துர்விநீதன் ஒரு பெரிய வஞ்சகத் துரோகி என்பது. துர்விநீதன்தான் பிக்ஷுவை மகேந்திர பல்லவனுக்குக் காட்டிக் கொடுத்து, காஞ்சியில் அவர் சிறைப்படும்படி செய்தவன். புலிகேசியின் கண்ணில் மண்ணைத் தூவுவதற்காகப் பல்லவனுடன் சண்டை போடுவது போல் போட்டு விட்டு, சைன்யத்

தோடு ஓடி ஒளிந்து கொண்டிருக்கிறான். புலிகேசி வாதாபிக்குத் திரும்பிப் போகாதபடி செய்து விட்டால், தன்னுடைய மருமகன் அதாவது புலிகேசியின் சகோதரன் சளுக்க சாம்ராஜ்யத்தின் ஏகச் சக்கராதிபதியாகி விடுவான் என்று கங்காட்டானுக்கு அந்தரங்க ஆசை. சமயம் நேர்ந்தால் துரோகி துர்விநீதனுக்குத் தக்க தண்டனை விதிக்க வேண்டும்.

மூன்றாவது முக்கியமான விஷயம் பிக்ஷு தெரிவிக்கச் சொன்னது என்னவென்றால், மகேந்திர பல்லவன் ஹர்ஷ வர்த்தனச் சக்கரவர்த்திக்கு ஏதோ இல்லாததும் பொல்லாததும் எழுதி ஓலை அனுப்பியிருப்பதாகத் தெரிய வருகிறது. அதைப் பற்றிய உண்மையைத் தீர விசாரித்து உசிதப்படி செய்ய வேண்டும். மகேந்திர பல்லவன், குறைந்தது இன்னும் ஒரு வருஷத்துக்குக் கோட்டைக் குள்ளேயே கஷ்டமில்லாமல் இருக்க முடியும். அவ்வளவு உணவுப் பொருள் சேகரித்து வைத்திருக்கிறான். இந்த நிலைமையில், புலிகேசி இன்னும் வெகு காலம் தென்னாட்டிலேயே இருந்து கொண்டிருக்கலாமா, அல்லது வாதாபிக்குத் திரும்பிப் போய் மறுபடியும் தக்க ஆயத்தத்துடன் படையெடுத்து வருவது நல்லதா என்பதை யோசிக்க வேண்டும்.

நாலாவது. எல்லாவற்றிலும் முக்கியமாகப் புத்த பிக்ஷு சொல்லியனுப்பிய விஷயம் இது. உத்தரபாதத்துச் சக்கரவர்த்தி ஹர்ஷவர்த்தனர் சிற்பங்கள், சித்திரங்கள் முதலிய கலைகளில் அதிக பற்றுள்ளவர். தென் பல்லவ ராஜ்யத்தில் அநேக இடங்களில் சிற்ப, சித்திரக் கலை மண்டபங்கள் இருக்கின்றன. மாமல்லபுரத்தில் மகேந்திர பல்லவன் ஹர்ஷவர்த்தனரை அழைத்துக் காட்டுவதற்காகவே அற்புத சிற்ப வேலைகளைச் செய்திருக்கிறான். இந்தச் சிற்ப வேலைகளுக்கு ஏதாவது சளுக்க வீரர்களால் கெடுதல் நேர்ந்ததாகத் தெரிந்தால், அதை மகேந்திர பல்லவன் தனக்குச் சாதகமாக உபயோகப் படுத்திக் கொள்வான். ஹர்ஷவர்த்தனருடைய விரோதத்துக்குச் சளுக்கர் குலம் ஆளாக வேண்டி நேரும். ஆகையால், பல்லவ நாட்டுச் சிற்பங்களுக்கோ சிற்பிகளுக்கோ சளுக்க வீரர்களால் எவ்விதக் கெடுதலும் நேராதபடி கண்டிப்பாகப் பார்த்துக் கொள்ள வேண்டும்.

மேற் கூறிய நாலு செய்திகளையும் தட்டுத் தடுமாறிச் சொல்லி விட்டு, "இவ்வளவுதான், பிரபு! என் குருநாதருக்கு நான் கொடுத்த வாக்கை நிறைவேற்றி விட்டேன்.



"இனிமேல் என் உயிரைப் பற்றிக் கொஞ்சமும் கவலை இல்லை" என்று குண்டோதரன் விம்மி அழத் தொடங்கினான்.

"அடே! நீ என்னத்திற்காக அழுகிறாய்?" என்று புலிகேசி கேட்ட போது, குண்டோதரன், "ஐயா! சளுக்க சைன்யம் என்றைக்குக் காஞ்சிக் கோட்டை மதிளைத் தாண்டி உள்ளே பிரவேசிக்கிறதோ, அன்றைக்கே சிறைப்பட்டிருக்கும் புத்த பிக்ஷுக்கள் எல்லாரையும் கழுவில் ஏற்றிவிடுவதாக மகேந்திர பல்லவன் சொல்லியிருக்கிறானாம். இதைத் தங்களிடம் சொல்லவேண்டாமென்று பிக்ஷு சொன்னார். ஆனால் என் மனது கேட்கவில்லை. என் குருநாதர் நான் பிறந்து வளர்ந்த காஞ்சி நகரின் நாற்சந்தியில் கழுவில் ஏற்றப்பட்டுக் காக்கை கழுகுகளால் கொத்தப்படுவார் என்பதை நினைக்கும்போது, எனக்குத் தாங்க முடியாமல் அழுகை வருகிறது!" என்றான்.

சற்று நேரம் ஆழ்ந்த சிந்தனையில் இருந்துவிட்டுப் புலிகேசி குண்டோதரனைப் பார்த்து, "நீ எப்படி பிக்ஷுவைச் சந்தித்தாய்? எப்படிக் கோட்டைக்கு வெளியே வந்தாய்? இங்கு எவ்விதம் வந்து சேர்ந்தாய்?" என்று கேட்க, குண்டோதரன் அதற்கெல்லாம் திருப்திகரமான மறுமொழி அளித்தான். பிக்ஷுவின் யோசனைப்படி தான் பல்லவ ஒற்றர் படையில் சேர்ந்திருப்பதாகவும், காஞ்சி காராக்கிரகத்தில் அடைக்கப் பட்டிருக்கும் புத்த பிக்ஷுக்களைப் பார்த்துக் கொள்வதே தன் சாதாரண வேலையென்றும், அதிர்ஷ்டவசமாகப் பாண்டியனுக்கு ஓலை கொண்டுவரும் வேலை தனக்குக் கிடைத்ததென்றும், கோட்டைக்கு வெளியே வருவதற்கு இரகசியச் சுரங்க வழி இருக்கிறதென்றும், அந்த வழியே தான் வந்ததாகவும், பாண்டியனிடம் ஓலையைச் சேர்ப்பிக்கும் எண்ணமே தனக்குக் கிடையாதென்றும் கூறினான்.

அதன்மேல் புலிகேசி, "திரும்ப பிக்ஷுவிடம் போய்ச் செய்தி சொல்ல முடியுமா?" என்று கேட்டான்.

"பிரபு! பாண்டியனிடமிருந்து மறு செய்தி இல்லாமல் திரும்பிப் போவது என் உயிருக்கு அபாயம். இருந்தாலும், இந்த உயிரைப் பற்றி இனிமேல் எனக்கு என்ன கவலை? தாங்கள் போகச்சொன்னால் போகிறேன்" என்றான் குண்டோதரன்.

"ஆம், அப்பா! நீ கட்டாயம் திரும்பிப் போகவேண்டும். போய், பிக்ஷுவிடம் இன்னும் பத்து நாளைக்குள் காஞ்சிமா நகரில் அவரை நானே நேரில் பார்ப்பதாகச் சொல்ல வேண்டும். எது நேர்ந்தாலும், என்ன கேள்விப் பட்டாலும் அவர் கொஞ்சமும் கலங்க வேண்டாமென்றும், எல்லா விவரங்களையும் நேரில் சொல்லுவதாகவும் கூறவேண்டும். உன்னால் முடியுமா?" என்று புலிகேசி கேட்டான்.

பிக்ஷுவைப் பத்து நாளில் நேரில் பார்க்கப் போவதாகப் புலிகேசி சொன்னவுடன், குண்டோதரனுக்கு உண்மையிலேயே தூக்கி வாரிப் போட்டு விட்டது. அவனுடைய முகத்திலும் கண்களிலும் நாம் என்றும் கண்டிராத ஆச்சரியத்தின் அறிகுறி காணப்பட்டது!

* * *

மேற்கூறிய சம்பாஷணை நடந்து ஒரு வாரத்திற்குப் பிறகு, காஞ்சிமா நகரின் தெற்குக் கோட்டை வாசலையும் மதிளையும் காவல் புரிந்த வீரர்கள் எல்லாம் குண்டோதரனைப் போலவே ஆச்சரியக் கடலில் மூழ்கினார்கள். ஏனெனில், அந்தக் கோட்டை வாசலுக்கு எதிரே, அகழிக்கு அக்கரையில், வராகக் கொடி பிடித்த தூதர்கள் இருவர் குதிரைமேல் நிராயுதபாணிகளாக வந்து நின்று, தாங்கள் கொண்டு வந்திருந்த கொம்பை வாயிலே வைத்து, 'பூம்' 'பூம்' 'பூம்' என்று ஊதினார்கள். அவர்களுடைய தோற்றமும், அந்தக் கொம்பின் முழக்கமும் அவர்கள் சமாதானத்தை நாடி வந்திருக்கும் புலிகேசியின் தூதர்கள் என்பதை எடுத்துக் காட்டின.

"ஆஹா! இதென்ன விந்தை! வாதாபிச் சக்கரவர்த்தியா சமாதானத் தூது அனுப்பியிருக்கிறார்? இது கனவா, நனவா?" என்று காஞ்சிக் கோட்டையில் காவல் புரிந்த பல்லவ வீரர்கள் எல்லாரும் வியந்து விம்மிதம் அடைந்தார்கள். நம்ப முடியாத அந்த அதிசயச் செய்தியானது அதி சீக்கிரத்தில், மந்திராலோசனை மண்டபத்தில் இருந்த மகேந்திர பல்லவரைச் சென்றடைந்தது.

# ஊசி முனை நிலமுமில்லை

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

சமாதானத்துக்காகத் திருதராஷ்டிரன் சஞ்சயனைப் பாண்டவர்களிடம் அனுப்பினான். அன்றிரவு அவனுக்குக் கவலையால் நித்திரையே வரவில்லை. விதுரனை அழைத்து வரச் சொல்லி அவனோடு பேசிக்கொண்டு இரவு முழுதும் கழித்தான். "பாண்டவர்களுக்கு ராஜ்யத்தைக் கொடுத்து விடுவதே உபாயம். அதுவே இரு பக்கத்தாருக்கும் நன்மை பயக்கும். பாண்டவர்களையும் உம் மக்களைப்போலவே நடத்த வேண்டும். நேர்மையே உபாயமும் தருமமும் இரண்டுமாகும்" என்று விதுரன் திருதராஷ்டிரனுக்குப் பலவாறாக உபதேசித்தான்.

மறுநாட் காலை சஞ்சயன் ஹஸ்தினாபுரம் திரும்பி வந்து சேர்ந்தான். சபையில் நடந்ததை எல்லாம் விவரமாகச் சொன்னான். முக்கியமாக, "அருச்சுனன் சொன்னதைத் துரியோதனன் கேட்கவேண்டும். 'கிருஷ்ணனும் நானும் சேர்ந்து துரியோதனனையும் அவனைப் பின் பற்றுகிறவர்களையும் நிர்மூலம் செய்யப் போகிறோம். சந்தேகமில்லை. காண்டீவம் யுத்தத்துக்காகத் துடிக்கிறது. அந்த வில்லின் நாண் நான் இழுக்காமல் தானாகவே அதிர்கிறது. தூணியிலிருந்து அம்புகள் தலை நீட்டி எப்போ, எப்போ என்று கேட்கின்றன. சஞ்சயனே! இந்த மூடன் துரியோதனன் இந்திராதி தேவர்களையும் போரில் வீழ்த்தக்கூடிய எங்களை விநாசகாலத்தால் தூண்டப்பட்டுச் சண்டைக்கு இழுக்கிறான்' இப்படிச் சொன்னான் தனஞ்சயன்."

சஞ்சயன் இதைச் சொன்ன பின் பீஷ்மரும் துரியோதனனுக்குச் சொல்லவேண்டியதெல்லாம் சொல்லிப் பார்த்தார்.

"அருச்சுனனும் கேசவனும் நரனும் நாராயணனும் என்று அறிவாயாக. அவர்கள் இருவரும் ஒன்று கூடி யுத்தத்தில் உன்னை எதிர்க்கும்போது இந்த உண்மையை அறிவாய்" என்று துரியோதனனுக்குச் சொல்லி விட்டு, திருதராஷ்டிரனை நோக்கி, "திரும்பத் திரும்ப 'நான் பாண்டவர்களைக் கொல்லுவேன்' என்று சௌர்யம் பேசும் கர்ணன் பாண்டவர்களுக்குப் பதினாறில் ஒரு அம்சம் ஆகமாட்டான். இவன் பேச்சைக் கேட்டு உன் புத்திரர்கள் தங்களுடைய நாசத்தைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள். விராடனுடைய நகரத்தைத் தாக்கிய போது அருச்சுனன் நம்முடைய கர்வத்தை அடக்கினானே, அந்தக் காலத்தில் அங்கே இருந்த கர்ணனால் என்ன செய்ய முடிந்தது? கந்தர்வர்கள் உன் மகனைச் சிறைப்படுத்திக் கொண்டு போன காலத்தில், இந்தக் கர்ணன் இப்போது கர்ஜிக்கிறானே, அவன் அப்போது எங்கே மறைந்திருந்தான்? அருச்சுனன் அல்லவோ கந்தர்வர்களை விரட்டியது?" என்று இவ்வாறு பீஷ்மர் குத்திக் காட்டினார்.

"குலத்துக்குத் தலைவரான பீஷ்மர் சொல்லுவதே செய்யத் தக்கது. யுத்தம் வேண்டாம். சமாதானமே உசிதம்" என்றான் திருதராஷ்டிரன்.

"நான் என்ன செய்வேன்? இந்த மூர்க்கர்கள் தாங்களே மகா புத்திமான்கள் என்று எண்ணி நான் எவ்வளவு கத்தினாலும் தாங்கள் போகும் வழியே செல்கிறார்கள். அறிவும் அனுபவமும் பெற்றவர்கள் அனைவரும் சமாதானமே செய்து முடிக்கத் தக்கது என்கிறார்கள். அப்படிச் செய்வதே என்னுடைய அபிப்பிராயமும்" என்று புலம்பினான்.

இதையெல்லாம் கேட்டுக்கொண்டிருந்த துரியோதனன் எழுந்தான்.

"அரசனே! எங்களுக்காக, நீர் பயந்து சாகவேண்டாம். நமக்கு வேண்டிய பலத்தைத் திரட்டியாகி விட்டது. வெற்றி அடைவோம் என்பதில் சந்தேக

யில்லை. யுதிஷ்டிரன் இந்திரப் பிரஸ்தத்தைப் பற்றிய பேச்சை விட்டு விட்டு இப்போது ஐந்து கிராமங்கள் கொடுங்கள் என்று கேட்கிறான். நம்முடைய பதினொரு அக்குரோணிச் சேனையைப் பார்த்துப் பயந்து விட்டான் என்பது உங்களுக்குத் தெரிய வில்லையா? பதினொரு அக்குரோணிகளைப் பாண்டவர்கள் எவ்வாறு எதிர்ப்பார்கள்? நம்முடைய வெற்றியைப் பற்றி உமக்கு ஏன் சந்தேகம்?" என்று தகப்பனுக்குத் தைரியம் சொன்னான்.

திருதராஷ்டிரன் "மகனே! யுத்தம் வேண்டாம். பாதி ராஜ்யத்தை வைத்துக்கொண்டு திருப்தியடைவாய். அதை நன்கு அரசாண்டால் போதும்" என்றான்.

துரியோதனனுக்குப் பொறுக்க முடியவில்லை. "ஒரு ஊசிமுனையளவு பூமியும் பாண்டவர்களுக்குக் கொடுக்கப்பட மாட்டாது" என்று உறுதியாகச் சொல்லி விட்டுச் சபையை விட்டு வெளியேறினான். சபையும் கலைந்து விட்டது.

• • •

பாண்டவர்கள் இருந்த இடத்தில் நடந்ததைச் சொல்லுவோம். சஞ்சயன் உபப்பிலாவ்யத்தை விட்டு ஹஸ்தினாபுரத்துக்குப் புறப்பட்டதும் யுதிஷ்டிரன் கிருஷ்ணனைப் பார்த்து, "வாசுதேவனே! சஞ்சயன் திருதராஷ்டிரனுக்கு உயிர் போன்றவன். அவன் பேச்சிலிருந்து திருதராஷ்டிரனுடைய உள்ளத்தில் இருப்பதை அறிந்தேன். எங்களுக்கு ராஜ்யம் ஏதும் தராமல் சமாதானம் அடையத்தான் திருதராஷ்டிரன் பார்க்கிறான். முதலில் சஞ்சயன் மிகவும் நயமாகப் பேசினான். இடையில் நடுத்தரமாகச் சமாதான விருப்பத்தோடு பேசினான். முடிவில் அவன் சொன்னது எனக்கு மிகவும் அநியாயமாகத் தோன்றிற்று. எங்கள் விஷயத்தில் திருதராஷ்டிரன் சத்தியமாக நடந்து கொள்ளவில்லை. எங்களுக்குச் சோதனை காலம் வந்து விட்டது. உன்னைத் தவிர எங்களைக் காப்பாற்றுபவர் யாரும் இல்லை. ஐந்து கிராமங்களை போதும் என்று சொல்லியனுப்பியிருக்கிறேன். துஷ்டர்கள் அதுவும் முடியாது என்கிறார்கள். இதை எப்படிப் பொறுப்பது? நீ தான் யோசனை சொல்லத் தக்கவன். உன்னைத் தவிர தருமமும் நீதியும் கண்டவர் யாரும் இல்லை."

இவ்வாறு யுதிஷ்டிரன் சொன்னதைக் கேட்ட கிருஷ்ணன் "இரு பக்கத்தாருடைய நலத்தையும் உத்தேசித்து நானே ஹஸ்தினாபுரம் போவதாகத் தீர்மானித்து விட்டேன். திருதராஷ்டிரனுடைய சபைக்குச் சென்று யுத்தமில்லாமல் உங்களுடைய உரிமைகளைக் காப்பாற்ற முயற்சி செய்வேன். இது நிறைவேறினால் உலகத்துக்கு க்ஷேமமுண்டாகும்" என்றான்.

யுதிஷ்டிரன், "அப்பனே! நீ போக வேண்டாம். இந்தச் சந்தர்ப்பத்தில்



பகைவர்களின் கூட்டத்துக்கு நீ போவதில் என்ன பயன்? மூடனான துரியோதனன் தன் பிடிவாதத்தை விடப் போவதில்லை. அந்தத் துஷ்டர்களின் மத்தியில் இந்தச் சமயத்தில் நீ போவது எனக்குப் பிடிக்கவில்லை. அதனால் நமக்கு எந்த நன்மை வருவதாக இருந்தாலும் உனக்கு அபாயம் நேரக்கூடிய காரியம் இப்போது வேண்டாம். அவர்கள் அதருமத்துக்கு அஞ்சுபவர்கள் அல்ல'' என்றான்.

கிருஷ்ணன், "தரும புத்திரனே! இந்த துரியோதனனுடைய குணம் எனக்குத் தெரியும். ஆயினும் உங்கள் பேரிலும் என் பேரிலும் உலகத்தார் யாதொரு தோஷமும் சொல்ல இடமில்லாமல் நாம் செய்ய வேண்டிய முயற்சியைச் செய்ய வேண்டும். சமாதானத்திற்காகச் சகல முயற்சிகளும் செய்யப்படவில்லை என்று உலகத்தார் என் மேல் குற்றம் சொல்லலாம் அல்லவா? அதற்கு இடம் கொடுக்கக் கூடாது. சமாதானம் செய்வதற்காகத் தூதனாகச் செல்லும் எனக்கு அவர்கள் ஏதேனும் தீங்கு செய்யப் பார்த்தார்களாகில் அவர்களை அப்படியே தகித்து விடுவேன். நான் போய்ப் பேசிச் சமாதானமாக முடித்து விடாமல் போனாலும் நம் பேரில் குற்றமில்லாதபடியாவது ஆகும். நான் போவதே நலம். இதைத் தடுக்க வேண்டாம்'' என்றான்.

யுதிஷ்டிரன், "நீ சகலமும் தெரிந்தவன். எங்களையும் அறிவாய். மற்றவர்களையும் அறிவாய். விஷயங்களை எடுத்துச் சொல்லுவதிலும் உன்னை விடச் சமர்த்தன் வேறு யார்?" என்றான்.

கிருஷ்ணன்: "அஜாத சத்ருவே! உன் உள்ளத்தை நான் அறிவேன். உன் சித்தம் எப்போதும் தருமத்தைப் பற்றி நிற்கிறது. அவர்களுடைய உள்ளமோ துவேஷத்தில் மூழ்கியிருக்கிறது. சொல்ல வேண்டியதை எல்லாம் சொல்லிப் பார்ப்பேன். யுத்தம் இன்றிச் சமாதானத்தின் பேரில் பெறக்கூடியது சிறிதாயினும் நீ அதைப் பெரிதாக மதிப்பாய் என்பது எனக்கு நன்றாகத் தெரியும். அதை நினைவில் வைத்துக் கொண்டு அவர்களிடம் நான் பேசிப்பார்க்கிறேன். உற்பாதங்களைப் பார்த்தால் போர் நடக்கும் என்றே காண்கிறது. ஆயினும் சமாதானத்திற்காக முயற்சி செய்வது கடமை.''—இவ்வாறு சொல்லி விடைபெற்றுக் கொண்டு கண்ணன் ஹஸ்தினாபுரம் போகத் தேர் ஏறினான்.

# பாரதி ஞாபகார்த்த நிதி

சென்ற 11-3-45 இதழில் 41-ம் பக்கம் தொடங்கி வெளியாகி யிருக்கும் மேற்படி நிதி ஜாபிதாவில் பின்வரும் இனங்கள் விடப்பட்டுப் போயிருக்கின்றன. இவையும் சேர்ந்து தான் மொத்தத் தொகை ரூ. 42,137—11—9 ஆகிறது.

| | |
|---|---|
| இலங்கை, பட்டிகோளா, ஸ்ரீ எம். வைத்தநாயகம் மூலம் | 261—0—0 |
| கம்பளை, காங்கிரஸ் வாசகசாலை, காரியதரிசி மூலம் | 225—0—0 |
| இலங்கை, கண்டி, ஸ்ரீ வி. அமிர்தலிங்கம் மூலம் | 80—0—0 |
| இலங்கை, கேகாலை, மகேனுவல் மணி ஸ்டோர்ஸ் ஸ்ரீ கருப்பையா அம்பலம் மூலம் | 34—0—0 |
| ஐந்தாம்பாரம், 'இ' வகுப்பு மாணவர்கள், இந்து உயர்தரப் பாடசாலை, சென்னை | 5—5—0 |
| திருப்பூர். ஸ்ரீ ஆர். நடராஜன் மூலம் | 4—4—0 |
| ஒரு அன்பர் | 1—0—0 |

★

4—3—45உ இதழில் 'ஸ்ரீ வி. எஸ். செங்கபதி அன்டு ஸ்ரீ வி. கே. நந்தகோபால், பங்களூர்' என்றிருப்பதை 'ஸ்ரீ வி. எஸ். சேதுபதி அன்டு...' என்றும், 'ஆம்பூர் ஹிந்து ஹைஸ்கூல் மாணவர்கள் ரூ. 5—11—0' என்றும், 'கல்கத்தா ஸ்ரீ வி. பி. எல். பத்மநாபன் மூலம் ரூ. 6—0—0' என்றும் வாசிக்கவும்.

★

புது டில்லி,
19—2—45.

கல்கி ஆசிரியர் அவர்களுக்கு,

புதுடில்லியில் பாரதியாரின் ஞாபகார்த்த நிதிக்காகப் பல முயற்சிகள் எடுத்துக் கொள்ளப்பட்டன. முக்கியமாக:—(1) பொது ஜனங்களிடமிருந்து நன்கொடையாக வசூல் செய்தது ரூ 242. (2) 1944 ஆ பாரதி தினக் கொண்டாட்டக் கமிட்டியாரிடமிருந்து நிதிக்காகக் கிடைத்தது ரூ. 40. (3) மதராஸி லோயர் செகண்டரி ஸ்கூல் உபாத்தியாயர்களிடமிருந்து ஹெட்மாஸ்டர் சங்கரநாராயண அய்யர் மூலம் வரவு ரூ. 15. (4) பொது ஜனங்கள் சேர்ந்து ('கல்கி'யில் வெளியிட்டிருந்தபடி கர்நாடக சங்கீத சபையார் மட்டும் அல்ல) நடத்திய 'கதம்ப நிகழ்ச்சி'யின் பயனாக வரவு ரூ 510. ஆகமொத்தம் ரூ. 807—0—0.

இந்தத் தொகைகளைச் சேர்த்துத் தங்களுக்கு அனுப்பிவைக்க வேண்டிய கடமையைத்தான் நான் ஏற்றுக் கொண்டேன். மேற்படி முயற்சிகளால் ஏற்பட்ட பெருமையும், புகழும் டில்லியிலுள்ள எல்லாத் தமிழன்பர்களுக்கும் உரியது.

ஏ. வி. ஏம். நாராயணன்,
கர்நாடக சங்கீத சபைத் தலைவர்.




மிக நேர்த்தியான மணமும், நல்ல நிறமும், குறைந்த விலையும் உள்ள லிப்டன்ஸ் தேயிலை பெண் தேயிலைகள் இதர தேயிலைகளை விட சிறந்தவை.




# லிப்டன்ஸ் தேயிலை பெண்

நேர்த்தியான இந்திய தேயிலை




பள்ளிக்கூடப் பரீக்ஷை முடிந்ததும் பாலச்சந்திரன் கதை எழுதுவதற்கென்று தன் சித்தப்பாவின் கிராமத்திற்குப் போக நினைத்துக் கடிதம் எழுதினான். வரும்படி சித்தப்பாவும் எழுதி விட்டார்.

அந்தக் கிராமம் உண்மையிலேயே அழகு வாய்ந்தது. நதியின் வனப்பும், தோப்புத் துரவின் செழிப்பும், பச்சைப் பயிர்களின் மணமும் இன்பக் கிளர்ச்சிக்கும் மன நிம்மதிக்கும் நாயகமாக விளங்கியது. ஆகவே இயற்கையின் அணைப்பிலே இன்பமான ஒரு கதையைச் சிருஷ்டிக்க, பாலச்சந்திரன் வந்து சேர்ந்தான்.

அப்போது சித்தப்பா வீட்டில் யாரும் இல்லை. யாரோ எதிர் வீட்டுப் பையன் ஓடி வந்து, "மாமா, மாமா! இதோ சாவி கொடுத்திருக்கிறாங்க. பக்கத்து ஊருக்கு ஏதோ அவசரமாக அந்தத் தாத்தாவும் பாட்டியும் போயிருக்கிறாங்க" என்று சொன்னான். பாலச்சந்திரனுக்குக் கோபம் — இருந்தாலும் சிறு கதைக்காகச் சிரமப்பட்டுக் கோபத்தைத் தணித்துக் கொண்டான்.

வீட்டிக்குள் சென்ற சமயம், வாசலில் ஒரு வண்டி வந்து நின்றது. அதிலிருந்து இறங்கிய நபர் "அத்தை, அத்தை!" என்று சொல்லிக்கொண்டே உள்ளே வந்தாள்.

சந்திரன் வாசற் பக்கம் வந்து புஷ்பாவைப் பார்த்தான். புஷ்பாவும் சந்திரனைப் பார்த்துத் திடுக்கிட்டு நின்றாள்.

"சனி! இங்கே ஏன் வந்தது?" என்று சந்திரன் திட்டினான்.

புஷ்பா வீட்டுக்குள் வந்தவள், "மன்னியுங்கள், மாமா! அத்தை, யாரும் இல்லையா?" என்றாள். சந்திரன் பேசாமல் மாடிக்குப் போய்விட்டான்.

நாலு வருஷங்களுக்கு முன் சந்திரனும் அவளும் விளையாட்டாகப் பேசிய போது, "உன் மடத்தனத்திற்கு ஒரு எல்லை கிடையாதா?" என்றாள் புஷ்பா. "ஆமாம், மடத்தனமாகப் பேசினால் இப்படித்தான் வாங்கிக்கொள்ள வேண்டும்" என்று அவள் கன்னத்தில் ஓங்கி அறைந்து விட்டான் சந்திரன்.

புஷ்பாவின் பூப்போன்ற கன்னத்தில் ஐந்து விரல்களும் ஐந்து நீல ரேகைப்போல் கவ்விக் கொண்டிருந்தன.

புஷ்பா, "உன் மூஞ்சியிலேயே இனிமேல் விழிக்கிறதில்லை" என்று சொன்னாள்.

இன்று விழிக்கும்படி சேர்ந்துவிட்டது. அவளாக வந்து விழிக்கவில்லை; அவளுடைய தந்தை எழுதிய கடிதத்துக்குப் பயந்தே அங்கு வந்தாள். வந்த இடத்தில், யார் முகத்தில் விழிக்கவும், பேசவும் கூடாது என நினைத்தாளோ, அந்த முகத்திலேயே விழித்தும் பேசியும் விட்டாள்.

புஷ்பாவுக்குக் காப்பி சாப்பிடவேண்டும் போல் இருந்தது. அடுப்பைப் பற்ற வைத்

தான். புகை மூண்டுவிட்டது. அவன் இதயத்திலும் புகைச்சலும் எரிச்சலும் சூழ்ந்தன.

காப்பியைக் கலந்து குடிப்பதற்குக் கையில் எடுத்தான். மாடியில் சந்திரன் இருப்பதை நினைத்தான். ஒருகணம், பொறுமையும் கர்வமும் "போகாதே" என்று தடுத்தது.

காப்பியை எடுத்துக்கொண்டு மாடிக்குப் போன சமயம், "யாரும் இங்கே வரக் கூடாது" என்று சந்திரன் இரைந்தான்.

புஷ்பா படியேறிக் காப்பியை மேஜைமேல் வைத்துவிட்டு இறங்கினாள். காப்பி ஆறிக் கொண்டிருந்தது. புஷ்பா மெதுவாக மாடியிலிருந்து இறங்கினாள்.

பாலசந்திரன் யோசனையில் ஆழ்ந்தான். தான் சிறுகதை எழுத வந்த இடத்தில் இப்படிப் புஷ்பாவைச் சந்திக்கவே அவன் மனம் கலங்கியது. கற்பனைகள் தகர்ந்தன. அன்றிரவே அங்கிருந்து புறப்பட்டுவிடத் தீர்மானித்தான்.

சமையலறையிலிருந்து குழம்பு தாளித்த மணம் வந்ததும், அது அவனுக்கு நரக வேதனையாக இருந்தது. மாடியில் நின்று ஊரின் சுற்றுப்புறக் காட்சியைப் பார்த்தான்.

திடீரென்று மேளச் சத்தம் கேட்டது. இன்பமயமான நாதஸ்வர அலைகள் அவன் காதிலே வந்து மோதின. வாசப் பன்னீர் மணமும், சந்தன வாடையும் மோதிக் கொண்டு வந்தன. அறையை விட்டு மொட்டை மாடியில் வந்து நின்றான். ஏதோ கல்யாண ஊர்வலம், மூலை திரும்பிக் கொண்டிருந்தது.

"இது காதல் கல்யாணமாம்" என்ற குரல் அருகில் கேட்டது.

திரும்பிப் பார்த்தான். பின்னால் புஷ்பா நின்று கொண்டிருந்தாள். பாலச்சந்திரன் வேறு பக்கமாகத் திரும்பினான். ஊர்வலம், அவர்கள் வீட்டுக்கு முன்னால் வந்தது.

"நல்ல ஜோடி" என்றாள் புஷ்பா.

சந்திரனுக்கு "வாயை அடக்கு" என்று சொல்லவேண்டும் போலிருந்தது.

புஷ்பாவிற்கு ஏன்டா பேசினோம் என்று தோன்றவே சிறிது நகர்ந்து சென்றாள்.

2

அக் கிராமத்தின் புல் பூண்டு, மரஞ் செடிகொடி, மாலையின் மயக்கம், காலையின் சோபை எல்லாவற்றையும் பாலச்சந்திரன் கண்டு வியந்தான். அவன் மனதிலே கதைக்கு வேண்டிய பண்பாடு ஏற்பட்டு வந்தது. தன்னுடைய அமரக் கதையைச் சித்தப்பாவிற்கோ சித்திக்கோ ரசிக்கத் தெரியாது. யாரிடமாவது சொல்லியாக வேண்டும். புஷ்பாவைத் தவிர யாரிடம் சொல்லுகிறது?

புஷ்பாவோ, இவன் இருக்குமிடத்திற்கு வருகிறதில்லை; அவன் நிழல் பட்ட இடத்திற்கே அவள் வருவதும் கிடையாது.

பாலச்சந்திரன் மத்தியானச் சாப்பாடு முடிந்து எழுத உட்கார்ந்தான். மாடியில் யாரோ ஒருவர் சித்தப்பாவுடன் பேசிக் கொண்டிருந்தார்.

"நான் சொல்லுகிறதைக் கேட்க வேண்டும்; பெண்ணை எனக்குப் பிடித்திருக்கிறது. ஆனால் என்னைப் பெண்ணுக்குப் பிடித்திருக்கிறதா என்று ஒரு கேள்வி கேட்டுவிட வேண்டும்" என்றார் வந்த மனிதர்.

"இதெல்லாம் என்னய்யா கேள்வி? நான் சொன்னால் சரிதான். ஆனால் உங்களுக்குக் குழந்தைகள் ஏதும் இல்லை. சொத்து முழுவதையும் அவள் பேருக்கே எழுதி வைத்து விடப் போகிறீர்கள். இல்லையா?"

"அப்படியே செய்கிறேன். நாளை மணப் பந்தலில் கலாட்டா செய்யக்கூடாது. பெண் சம்மதம் தெரிந்துவிட்டால்......?" என வந்தவர் இழுத்தார்.

பாலச்சந்திரன் செவியில் இவையெல்லாம் லேசாக விழுந்தன. அவர் முகத்தைப் பார்த்தான். வயசும் அதிகமாகி, தாடி வேறு நரைத்துக் கொண்டிருந்தது. நெற்றியிலும் முகத்திலும் சுருக்கம் வேறு. சிந்தனையிலிருந்து விடுபட்டு, "உங்களுக்கா கல்யாணம்?" என்றான்.

சித்தப்பா, "ஆமாடா, முதல் தாரம் தவறி விட்டது. இரண்டு வகாரம் இருக்கு. புஷ்பாவோட அம்மா, என்னுடைய இஷ்டத்துக்கு விட்டுவிட்டாள். இவர் பெண்ணைப் பார்க்க வந்திருக்கிறார்" என்றார்.

பாலச்சந்திரன் முறைத்துப் பார்த்தான். அப்பெரியவர், "எதற்கும் பெண்ணைக் கூப்பிடுங்கள். நான் நேரிலேயே சம்மதம் தெரிந்துகொள்ள வேண்டும்" என்றார்.

"வெற்றிலை கைமாறி விட்டார்களோ?" என்றபடியே சித்தி மாடிக்கு வந்தாள்.

"இன்னும் இல்லை. ஏதோ புஷ்பா கொடுத்து வைத்தவள். பெரிய இடம் கிடைத்தது" என்ற சித்தப்பாவின் குரலும் அவன் செவியில் நுழைந்தது.

"தங்களுக்கு வயது என்ன?" என்றான் பாலச்சந்திரன். அவன் குரலில் கோபம் தொனித்தது.

"இது கோர்ட்டு இல்லே, தம்பி! அதிகாரமாகப் பேசாதே! சாந்தமாகக் கேள்."

"இதோ சாத்வீகமாகக் கேட்கிறேன், பதில் சொல்!" என்று 'பளீர்' என்று கன்னத்தில் அறைந்தான். ஐந்து விரல்களும் அவரது வலது கன்னத்தில் பேயாகப் பதிந்தன.

"டேய், நான் மட்டும் இரண்டு லக்ஷ ரூபாய்க்குப் பண்ணையாராக இருக்கும் வரையில் உன்னை ஒரு கை பார்க்காமல் விடப் போவதில்லை" என்று அவர் அழுகையோடு கத்தினார்.

சித்தப்பாவும் சித்தியும் அப் பெரியவரைத் தாங்காதபடி தாங்கி மன்னிப்புக் கேட்டனர். மாடியில் சிறிது நேரம்கூட நிற்காமல் மடமடவென்று இறங்கி ஆற்றங்கரையை நோக்கி நடந்தான் பாலச்சந்திரன்.

எதிரே, கலகலவெனச் சிரித்தபடி புஷ்பா வந்துகொண்டிருந்தாள். சந்திரனைக் கண்டதும் அவள் முகத்திலிருந்த சிரிப்பு, நடையின் மனோகரம் எல்லாம் கரைந்து விட்டன.

"புஷ்பா!" என்றான்.

"மானம், மரியாதை இருந்தால் என்னிடம் பேசவேண்டாம். இந்தச் சனி தங்கள் முகத்தில் விழிக்காது......"

அவள் நாலெட்டு நடந்து சென்றாள். பாலச்சந்திரனுக்கு மீண்டும் கோபந்தான் வந்தது.

"உன் வாய்த் துடுக்குக்குச் சரியான பழி கிடைத்தது. அக்கிழவனோடு நீ செத்துத் தொலை."

புஷ்பாவிற்கு ஒன்றும் விளங்கவில்லை. மருண்ட மான்போல் திரும்பிப் பார்த்தாள். இடுப்பிலிருந்த குடத்தைக் கீழே வைத்து விட்டு, வேகமாகப் போகும் பாலச் சந்திரனைத் தொடர்ந்து ஓடிச் சென்று பிடித்தாள். ஆத்திரமான குரலில் "நான் எதற்காகச் சாக வேண்டும்?" என்று கேட்டாள்.

அவள் கேட்ட கேள்வி சந்திரன் காதில் விழுந்தது. ஆனால் பதில் சொல்லாமல் மேலே நடந்தான்.

மேல் வானத்திலே சூரியன் செங்கிரணங்களால் பச்சை மரங்களைத் தழுவியபடியே மறைந்தான்.

## 3

மறுநாள் சித்தப்பா அவனிடம் பேசவில்லை. முகத்தைக் கடுகடுவென்று வைத்துக்கொண்டார். சித்திதான் மாடியிலேயே இருந்த அவனுக்கு ஆகாரம் கொண்டு வந்து கொடுத்தாள்.

ஆனாலும் புஷ்பாவின் கல்யாண விஷயமாகப் பாலச்சந்திரனால் ஒன்றும் சொல்லாமல் இருக்க முடியவில்லை.

"சித்தப்பா! புஷ்பாவை யாருக்காகிலும் கொடுங்கள். அந்தக் கிழக்கோட்டான்..."

"பேச்சை நிறுத்து. ஆடு நனைகிறதே என்று ஓநாய்க்குக் கவலையா? புஷ்பா! புஷ்பா!" என்று இரைந்தார்.

அவனுக்கு முன்னதாக மல்லிகையின் மணம் வந்தது. மின்னற் கொடிபோல அவள் மாடிக்கு வந்தாள்.

"இந்த நியாயாதிபதியைப் பார். இவர் உன் வாழ்வுக்காக நியாயம் சொல்ல வருகிறார்! நீ இவனை மணக்க விரும்புகிறாயா?"

"இல்லை. இந்தத் துர்வாஸ முனிவரின் கோபம் எனக்கு வேண்டாம்!"

அவள் படபடவென மாடிப்படியில் இறங்கிப் போய்விட்டாள்.

வீட்டுக்குள்ளே புஷ்பா வந்தபோது யாரோ அத்தையோடு பேசுவது கேட்டது.

"பையனுக்குக் கலியாணம் ஆனியில் முடிந்துவிடுமா?"

"முடிக்க வேண்டும். எம்.ஏ. எழுதியிருக்கிறான். நீங்கள் எங்கே அவனுக்கு உங்கள் பெண்ணைக் கொடுப்பீர்கள்?"

"கொடுப்பதற்கென்ன? அழகில்



குறைச்சலா? இல்லை, அந்தஸ்தில் குறைச்சலா? சரஸ்வதியிடம் சொன்னேன். நேற்றே, மூர்த்தா னானோ, அந்தப் பையனைப் பார்த்தானாம். 'பிடித்து விட்டது' என்றான். எனக்கும், வீட்டில் அவர்களுக்கும் பிடித்து விட்டது. உங்களுக்குத் தான்..." என்று நிறுத்தினாள்.

புஷ்பா பேசிக் கொண்டிருந்த இடத்திற்கே வந்து விட்டாள்.

"நேற்றுத்தானே இந்தப் பெண்ணிற்கு நிச்சயம் ஆனது? யாரோ வாகைக்குளம் பண்ணையாராமே?"

புஷ்பாவுக்கு அழவேண்டும் போலிருந்தது. அவளுடைய அத்தை அவளை ஏதோ எடுத்து வர ஏவினாள். புஷ்பா எடுத்துவரப் போன சமயம் மீண்டும் சம்பாஷணை தொடங்கியது.

"நிச்சயத் தாம்பூலம் அடுத்த வெள்ளிக் கிழமை வைத்திருக்கிறோம். புஷ்பா பாடு முடிந்தது......" என்ற அத்தையின் குரல் கேட்டது.

புஷ்பா பேசாமல் மாடிக்குப் போய்க் கண்ணீர் வடித்துக் கொண்டு நின்றாள். தான் ஏன் அழவேண்டுமென்று அவளுக்கே விளங்கவில்லை. அவள் மனதிலே 'துர்வாஸ முனி பாலச்சந்திர'னின் பேரில் இருந்த கோபம் எல்லாம் மாறி இன்பக் கிரணங்களாகிக் கொண்டிருந்தன. சரஸ்வதியும் பாலச் சந்திரனும் வாழ்க்கை நடத்தப் போவதையும் நினைக்க நினைக்கச் சிரிப்புச் சிரிப்பாய் வந்தது. பிறகு, 'சரஸ்வதி கறுப்பு; மணக்காதே!' என அவனுக்கு எழுத நினைத்தாள். அதற்கும் அவள் மனம் இடங்கொடுக்கவில்லை.




அப்படியே வெண்ணிலவில் சோகப் பதுமையாக உட்கார்ந்திருந்தாள். பால்வொளி எங்கும் படர்ந்து தொட்டதை யெல்லாம் வெள்ளி மூலாம் பூசிக் கொண்டிருந்தது. புஷ்பா மனம் நைந்து முழங்கையில் தலை புதைத்தவண்ணம் அழுதுகொண்டிருந்தாள்.

மொட்டை மாடிக்கு வந்த பாலச்சந்திரன் புஷ்பாவைப் பார்த்ததும், "சித்தி!...... ஏ, சித்தி......!" என்று இரைந்தான்.

சித்தியின் குரல் கேட்கவில்லை. மீண்டும் அழைத்தான். "சித்தி! இந்தச் சனியைக் கீழே அழைத்துச் செல்" என்று கத்தினான். சித்தி மாடிப்படி யேறி வரும் காலடி ஓசை கேட்டது.

"இந்தா, இங்கே என்ன வேலை? இறங்கிப் போ!" என்றான்.

எதிரே வெண்ணிலவில் குளித்து நிற்கும் பாலச்சந்திரனைப் புஷ்பா வெறித்துப் பார்த்து, "நான் இனி இங்கிருந்து ஆற்றுக்குத்தான் போக வேண்டும்" என்றாள்.

"தற்கொலை செய்துகொள்ளத் தண்ணீர் கூட இல்லை. தைரியமாகப் போய் வா!"

"உங்கள் நெஞ்சம் கல்லா? போனால் போகட்டும். தங்களுக்கு எந்த வான் வந்தாலும் 'கறுப்பாயி சரஸ்வதி' வேண்டாம்."

"புஷ்பா!" என்றான் பாலச்சந்திரன். அதிலே வெளிதமும் மன இளக்கமும் ஒலித்தது.

4

தெருவிலிருந்து "ஐயா......ஐயா..." என்று வாகைக்குளம் பண்ணையார் கத்தினார். மாடியிலிருந்து சந்திரனும் புஷ்பாவும் எட்டிப் பார்த்தார்கள். நிலவொளியிலே. பரிதாபகரமாகப் பண்ணையார் நின்று கொண்டிருப்பதைப் பார்த்து இருவரும் கலகல வெனச் சிரித்தனர்.

"ஐயா, ஐயா!" என்ற குரல் கேட்ட சித்தப்பா மாடிக்குள்ளே இருந்தபடியே. "அந்த வாகைக் குளம் பண்ணையாரா? — பண்ணையாராக வடிக்க ஐம்பது ரூபாய் பேசியிருந்தோமே? இன்னும் பாக்கி இருபத்தைந்து கேட்க வந்து விட்டான்!" என்றார்.

ஒரு 'தட்டு' கன்னத்தில் தட்டினான் சந்திரன். அந்தத் 'தட்டு' புஷ்பாவின் பூப்போன்ற கன்னத்தில் பூப்போல விழுந்தது.




# கரடியின் கல்யாணம்

ராஜி

ராஜாவின் வீட்டில் கலியாணம் என்றாலே அமர்க்களப்படும். அதுவும் ராஜாவுக்கே கலியாணம் என்றால் கேட்கவேண்டுமா? கரடி ராஜாவுக்குக் கலியாணம் என்ற செய்தியைக் கேட்டவுடன் காட்டிலுள்ள எல்லா மிருகங்களுக்கும் சந்தோஷம். காட்டில் ஒரே குதூகலம்தான். கரடி ராஜா கலியாண ஏற்பாடு முழுவதையும் தம் பிரதான மந்திரி நரியிடம் ஒப்படைத்தது.

முகூர்த்த நாள் நெருங்கவே கரடி ராஜா நரியைக் கூப்பிட்டு "நரியாரே! அழைப்புக் கடிதங்கள் அனுப்புவது முதல், சமையலறையில் செய்யவேண்டிய ஏற்பாடு வரையில் நீங்கள் நன்றாகச் செய்து முடிக்கவேண்டும். அதற்கு வேண்டிய ஆட்களை ஏற்பாடு செய்து கொள்ளுங்கள். ஆனால் துஷ்ட மிருகங்களை மாத்திரம் ஏற்பாடு செய்யாதீர்கள்" என்று கரடி ராஜா உத்தரவிட்டது.

முகூர்த்த தினம் வந்தது. காலை முதற்கொண்டே பாண்டு வாத்தியங்களும், மேள வாத்தியங்களும் முழங்கிற்று. முகூர்த்த வேளையும் வந்தது. அப்பொழுது மாப்பிள்ளை கரடி ராஜாவின் முகம் மாறுதலடைந்தது. "என்ன இது! என்னுடைய கலியாணத்திற்குக் காட்டிலுள்ள ஒரு மிருகமாவது வரவில்லையே, என்ன அவமரியாதை! பல வெகுமானங்களுடன் என் கலியாணத்திற்கு என் பரஜைகள் வருவார்களென்று நான் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தும் ஒருவராவது வரவில்லையே! இவ்வளவு அமர்க்களமாக ஏற்பாடுகள் செய்து என்ன பிரயோஜனம்?" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டது. பிறகு கோபமடைந்து நரியாரைக் கூப்பிட்டு "நரியாரே! இதென்ன, ஒருவராவது நம் அழைப்பை லட்சியம் செய்யவில்லையே!" என்றது.

சாப்பாட்டு நேரம் வந்தும் ஒரு மிருகமாவது அரண்மனையை நோக்கி வருவதைக் காணவில்லை. ராஜா கரடியின் கோபம் அதிகரித்தது. "சரி! சாப்பாட்டிற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள். யாராவது வருகிறார்களா என்று பார்ப்போம்" என்றது. "சீக்கிரம் இலை போடுங்கள்" என்று கத்திற்று நரி. அங்கிருந்த சில மிருகங்கள் "இலைக் கட்டைக் காணவில்லையே!" என்றன. "பால், தயிர்





ஒன்றையும் காணவில்லையே" என்றது மற்றொன்று. "சமையலறையில் ஒன்றையுமே காணவில்லையே" என்றது இன்னொன்று.

இதைக் கேட்ட கரடி ராஜா கோபம் கொண்டு மந்திரி நரியை அழைத்துக் கொண்டு சமையலறைக்குப் போனால் அங்கு சமையல் செய்தது போலவே தெரியவில்லை. அடுப்பும் காலியாக இருந்தது. கறிகாய்கள் அறைக்குச் சென்றால் அந்த அறையும் காலியாக இருந்தது.

உடனே கரடி ராஜா மந்திரியைக் கூப்பிட்டு "சமையலறைக்கு யாரைக் கவனிக்க ஏற்பாடு செய்தீர்கள்?" என்று கேட்டது. "யானைகளையும், நெருப்புக் கோழிகளையும் ஏற்பாடு செய்திருந்தேன்" என்றது நரி. "ஓஹோ! அதனால்தான் அடுப்பில் ஒரு நெருப்புக் கட்டி கூட இல்லை. சமையலறையே காலியாக இருக்கிறது. அது சரி; பாலுக்கும் தயிருக்கும் யார் காவல்?" என்றது கரடி. "பூனைகளைத் தான் காவலுக்கு ஏற்பாடு செய்திருந்தேன்" என்று சொல்லிற்று நரி. கோபத்தை அடக்கிக் கொண்டு கரடி ராஜா "இலைக்கும், கறி காய்களுக்கும் யாரை ஏற்பாடு செய்திருந்தீர்கள்?" என்று கேட்டது. "சில ஆடுகளையும், மாடுகளையும் தான்" என்று நரியாரிடமிருந்து பதில் வந்தது. "பழங்களுக்கு யார் காவலோ?" என்று கேட்டது கரடி. "சில மந்திக் குரங்குகள் தான்" என்றது நரி.

அதைக் கேட்ட கரடி கோபமடைந்து உறுமிற்று. அதற்கு நரி "நீங்கள் தானே துஷ்ட மிருகங்களை ஏற்பாடு செய்யவேண்டாம் என்று சொன்னீர்கள்?" என்றது. உடனே கரடி ராஜா "அது போனால் போகட்டும், நம் அழைப்புக்கு ஏன் ஒருவரும் வரவில்லை? யாரிடம் அழைப்புக் கடிதங்கள் கொடுத்தனுப்பினீர்கள்?" என்று கேட்க, நரி "சில கழுதைகளிடம்தான்" என்றது. கரடி கோபமடைந்து "காகிதங்களைத் தின்னும் கழுதைகளிடமா அழைப்புக் கடிதம் அனுப்புவது? அதனால்தான் ஒருவருக்காவது அழைப்புக் கடிதம் போகவில்லை" என்று நரியைக் கோபித்தது.



வாலிபன்:— வாருங்கள்! ஊரிலே இருந்து எப்போ வந்தீர்கள்? ஏது அடையாளமே தெரியாமல் ரொம்ப இளைத்துப் போய் விட்டீர்களே? நம்ம ஊரிலே ரேஷன் கீஷன் ஏதேனும்?...

பெரியவர்:— அந்த வயித்தெரிச்சலை என்னத்துக்கப்பா கேட்கிறாய்? ஊரிலே ரேஷன் வந்தாலும் வந்தது. நான் நல்ல சாப்பாடாகச் சாப்பிட்டு நாளு மாசமாச்சு!

—நந்தன்.

"ராஜாவே! நான் வேறு யாரிடமாவது அழைப்புக் கடிதம் அனுப்பி இருந்து யாவரும் சாப்பிட வந்திருந்தால் நம் கதி என்ன ஆகியிருக்கும்? சற்று யோசியுங்கள்!" என்று நரி சமயோசிதமாகச் சொல்ல, கரடிராஜா "ஆமாம், ஆமாம், நீ செய்தது தான் சரி. என் மானத்தைக் காப்பாற்றினாய்!" என்று நரியைத் தட்டிக் கொடுத்தது.

# பத்து ரூபாய் உதவி!

சாவி

பொங்கல் பண்டிகைக்கு இரண்டு தினங்களுக்கு முன்பாக நானும் எனது நண்பரும் காரில் புறப்பட்டுக் காஞ்சிபுரம் போய்க்கொண்டிருந்தோம். காலை நேரம். கார் பூந்தமல்லி தாண்டி நாலைந்து மைல் சென்றதும் எங்களுக்கு லேசாகக் குளிர ஆரம்பித்து விட்டது. மார்கழி மாதம், எதிர்க் காற்று, சிறு தூற்றல் எல்லாமாகச் சேர்ந்து எங்கள் குளிரை பலப்படுத்தியது. எனவே, எங்களுடைய சம்பாஷணையும் இயற்கையாக, தேசத்தின் ஸ்திதியைப் பற்றி ஆரம்பித்து அதிலிருந்து யுத்தத்தைப் பற்றியும் பிறகு இந்த யுத்தத்தினால் ஏழைகள் படும் கஷ்டத்தைப் பற்றியும் பேசிக்கொண்டே போனோம். வழியில் சாலைக்குப் பக்கத்தில் ஒரு சிறு குடிசை தெரிந்தது. இன்னும் கொஞ்ச தூரத்தில் ஒரு கிழவன் ஒரு மரத்தடியில் சட்டிப்பானைகளையும் மற்றும் ஏழைகள் கையாளும் குடும்பச் சாமான்களையும் வைத்துக்கொண்டு உட்கார்ந்திருந்தான். குளிர் காற்றைத் தாங்காமல் அவன் தேகம் 'வெட வெட' என்று நடுங்கிக் கொண்டிருந்தது. என் நண்பர் அவனைக் கண்டு இரங்கினார்.

"பாவம்; குடியிருக்க ஒரு வீடு கூட இல்லாமல் ஜனங்கள் இப்படித் தவிக்கிறார்களே" என்று அங்கலாய்த்தார்.



"அடடா! இப்படி இவர் மூர்ச்சையாகிக் கிடக்கிறாரே, ஏன்?"

"'ஐயா, உங்கள் ஓட்டல் சப்பாத்தி நன்றாயிருக்கிறது' என்றுதான் சொன்னேன். மூர்ச்சையாகும்படியாக வேறு ஒன்றுமே நான் சொல்லவில்லையே!"

எனக்கும் கிழவனைக் காணப் பரிதாபமாகவே இருந்தது.

"இவர்களெல்லாம் சமீபத்தில் இந்தப் பக்கம் வந்த வெள்ளத்தில் விடுபட்ட அநாதைகளாயிருக்கலாம்" என்றேன்.

"இருக்கலாம்; இல்லாவிட்டால் இவன் மரத்தின் கீழ் சாமான்களைப் பரப்பிக் கொண்டு உட்கார்ந்திருப்பானேன்?" என்றார் என் நண்பர்.

"பாவம்!" என்றேன் நான்.

"ஐயோ பாவம்!" என்றார் என் நண்பர்.

கிழவன் மீது ஏற்பட்ட எங்கள் அநுதாபம் அதிகரித்தது.

கிழவனைக் கூப்பிட்டு அவனிடம் பத்து ரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்து "இந்தா, இதை வைத்துக் கொள். கடவுள் உன்னைக் காப்பாற்றுவார்" என்றோம்.

கிழவன் தன் இரு கைகளையும் கூப்பிக் கும்பிட்டு "மகராஜன்களாயிருப்பீங்க" என்று வாழ்த்திவிட்டுப் போனான்.

பொங்கல் முடிந்து அதே வழியாக நாங்கள் இருவரும் திரும்பி வந்தபோது அந்த மரத்தின் கீழிருந்த கிழவனைக் காணவில்லை. எங்கே போயிருப்பான் என்று நாங்கள் யோசித்துக் கொண்டிருந்த சமயம் அருகிலிருந்த அந்தக் குடிசையிலிருந்து வெளியே வந்தான் அந்தக் கிழவன். எங்களைக் கண்டதும் காரின் சமீபம் ஓடிவந்தான். நான் அந்தக் கிழவனைப் பார்த்து "அந்தக் குடிசை யாருடையது?" என்று கேட்டேன்.

"என்னுடையது தான்" என்றான் கிழவன்.

"உன்னுடையதா? அப்படியானால் அன்று நாங்கள் வந்தபோது நீ ஏன் மரத்தடியில் உட்கார்ந்திருந்தாய்?" என்று கேட்டோம்.

கிழவன் "அன்றைக்கு என் மனைவி பொங்கலுக்கு வீட்டுக்குள் சுண்ணாம்பு அடிப்பதற்காகக் குடிசைக்குள்ளிருந்த சாமான்களை எல்லாம் கொண்டு வந்து இந்த மரத்தடியில் வைத்திருந்தாள். அவள் சுண்ணாம்பு அடிக்கும் வரை நான் சாமான்களுக்குக் காவலாக இங்கே உட்கார்ந்திருந்தேன்" என்றான்.

# ஒரு நேஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்




## கூறுவது!

“
- நான் உங்களுடைய சேமிப்பை மகா பத்திரமாக வைத்திருக்கிறேன்.
- நானே பனிரெண்டு வருஷங்களில், ரூ. 10 லிருந்து ரூ. 15 ஆக மதிப்பில் உயருகிறேன்.
- எனது வட்டிக்கு வருமான வரி கிடையாது.
- என்னை, சர்க்காரால் நியமிக்கப்பட்ட அதிகாரம் பெற்ற ஏஜண்டுகளிடமிருந்தோ, அல்லது சேவிங்ஸ் ஸ்டோரிலோ அல்லது தபாலாபீஸிலோ சுலபமாக வாங்கலாம்.
- என் அண்ணன்மார்களையும் ரூ. 50, 100, 500 அல்லது ரூ. 1000க்கு வாங்கலாம். அவைகள் எல்லாம் என்னைப்போலவே பனிரெண்டு வருஷங்களில் 50 சத விகிதம் உயருகின்றன.
- ரூ 10 ரொக்கம் கட்டினால் நான் உங்களுடையவனாகிவிடுகிறேன். அல்லது நாலணாவில் ரூ 1, அணா 8 அல்லது அணா 4-க்கு சேவிங்ஸ் ஸ்டாம்புகள் வாங்கியும் என்னைப் பெறலாம்.
- 3 வருஷத்திற்குப் பிறகு எப்பொழுது வேண்டுமானாலும் என்னை ரொக்கமாக மாற்றிக்கொள்ளலாம். உங்களது பணமும் உங்களுக்காக நான் சம்பாதித்த வட்டியும் கிடைக்கும்.

## - ஆனால் என்னை வைத்திருப்பது உங்களுக்கு அதிக லாபத்தைக் கொடுக்கும்.”

அவைகளை சர்க்காரால் நியமிக்கப்பட்ட அதிகாரம் பெற்ற ஏஜண்டுகளிடமோ அல்லது சேவிங்ஸ் ஸ்டோர் அல்லது தபாலாபீஸ்களிலிருந்தோ பெறுங்கள்.

TM AAA 1235

KALKI—18-3-1945




# அவன் திருட்டு விற்பனையை ஒழிக்க உதவுகிறன்

தேசிய போர்முனையின் பிரசுரம்

AAA 1384—B. TM

KALKI—18-3-1945




## குமரி மலர்

[ஆசிரியர்: ஏ. கே. செட்டியார்; விலாசம்: கதீட்ரல் போஸ்ட், சென்னை; விலை: ரூ. 5.]

மாதம் ஒன்றாக மலர்ந்து கொண்டிருந்த குமரி மலர், சமீபத்தில் சிற்சில மாதங்கள் தடைப்பட்டுப் போனதை எல்லாம் ஈடு நிரப்பும்படியாக இந்தப் பிரம்மாண்ட குமரி மலர் வெளியாகியிருக்கிறது. பக்கம் 146-தான். என்றாலும், பார்ப்பதற்கும் எடுப்பதற்கும் ஆயிரம் பக்கம் என்று தோன்றும்படி அந்தஸ்தாயும் கனமாயும் அமைந்திருக்கிறது.

சாதாரணமாய்க் குமரி மலரைப் பார்த்தவுடன், "அச்சு நன்றாயிருக்கிறது. தோற்றம் அழகாயிருக்கிறது" என்று சொல்லத் தோன்றுவது வழக்கம். இம்மாதிரி புகழ்ச்சியைக் கேட்டுக் கேட்டு ஸ்ரீ ஏ. கே. செட்டியார் அவர்களுக்கு அலுத்துப் போயிருக்க வேண்டும். அதனால் தான் இந்த மலரிலுள்ள ஏராளமான புகைப் படங்கள் அதிகமாகக் கண்ணைக் கவர்ந்து விடாமல் புதிய முறையில் மிக மிக மங்கலாக அச்சிடப்பட்டிருக்கின்றன போலும்!

எனவே, இந்த மலரில் நம்முடைய கவனத்தை அதிகமாகக் கவருவது விஷயங்களின் பெருமைதான்.

"பரணன்" எழுதிய கங்கை கொண்ட சோழபுரத்துக் கட்டுரையைப் படிக்கும் போது, பழந் தமிழ்நாட்டைக் குறித்து உண்டாகும் பெருமையினால் நம் தோள்கள் கங்கை கொண்ட சோழபுரத்துக் கோபுரங்கள் [illegible] கின்றன.

"மனிதனும் அழிகிறான். சாம்ராஜ்யங்களும் அழிகின்றன. உண்மைதான். ஆனால், அழியாதது எது? பெரியது எது? உண்மையானது எது? நித்தியமாய் நிற்கின்ற இக்கோவிலைப் பார்க்கும் போது தெரியவில்லையா? மனிதனுடைய செயல்களே பெரியவை. உண்மையானவை, அழியாதவை......" என்று இந்த அரிய கட்டுரையின் இறுதியில் படிக்கிறோம்.

ஆம், குமரி மலரிலேகூட அச்சுப் பிழைகள் நுழைந்து, 'உண்மை' யானது 'உன்மை'யாகத் தேய்ந்தாலும் தேயும். கங்கை கொண்ட சோழபுரத்துக் கோவிலைப் போன்ற, மனிதனுடைய அருஞ் செயல்கள் என்றும் அழியாமல் தலை நிமிர்ந்துதான் இருக்கும்.

இன்னும், இந்தக் குமரி மலரில் ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களின் "அடைக்கலப் பொருள்" என்னும் கட்டுரை, அவருடைய கவிதை யாராய்ச்சிக் கட்டுரைகளுக்குள்ளே மிக மிகச் சிறந்த தொன்றாக விளங்குகிறது.

எத்தனையோ நண்பர்களை மூடியாத் துயரத்தில் ஆழ்த்திவிட்டு இளமையில் காலஞ் சென்ற ஸ்ரீ செல்லையா, "சங்கீதமும் சாஹித்யமும்" என்பதைப் பற்றி எழுதியுள்ள விரிவான ஆராய்ச்சிக் கட்டுரை யொன்றும் இம் மலரில் மிளிர்கிறது.

இம்மலரின் கடைசிக் கட்டுரையாக விளங்கும் ஸ்ரீ ஏ. கே. செட்டியார் அவர்களின் 'தேப்பான யாத்திரை' என்னும் கட்டுரை, அவருடைய எல்லா யாத்திரக் கட்டுரைகளையும் போலவே வெகு ரசமாயிருக்கிறது.

## நவசக்தி ஆண்டு மலர்

[ஆசிரியர்: சக்திதாசன் சுப்ரமண்யம்; விலாசம்: 2, சாலை தெரு, மயிலாப்பூர், சென்னை; விலை: ரூ. 2.]

சாதாரணமாகத் தமிழ் நாட்டுப் பத்திரிகைகள் வெளியிடும் ஆண்டு மலர்களில் உள்ள எல்லா அம்சங்களும் இந்த மலரிலும் இருக்கின்றன. இம் மலரில் கட்டுரை எழுதியுள்ள எழுத்தாளர் அனைவருடைய படங்களும் முதல் நான்கு பக்கங்களில் காட்சியளிக்கின்றன.


"ராமு! நேற்று மீட்டிங்கிலே உன்னைப் பத்தி ஒன்றும் காணுமே?"

"நீ பார்த்த லட்சணம் அது! இதிலே கரகோஷம்னு போட்டிருக்கே, அது பூரா நானேதான்!"

ஸ்ரீ ந. பிச்சமூர்த்தி, ஸ்ரீ க. நா. சுப்ரமண்யம், ஸ்ரீ பெ. தூரன் முதலிய பல சிறந்த தமிழ் எழுத்தாளர்கள் கட்டுரை வழங்கியிருக்கிறார்கள்.

'விடுதலை இயக்கம்' என்ற தலைப்பில் ஆசிரியர் எழுதியிருக்கும் முதல் கட்டுரையில் பாதநாட்டிய அபிநயக்கலையை ஒரு தாக்குத் தாக்கியிருக்கிறார்.

எல்லாரும் 'ஓஹோ!' என்று சொல்லிக் கூத்தாடிக் கொண்டிருக்கும் ஒரு விஷயத்தில், எதிர்க் கட்சியைச் சொல்வதற்கு ஒருவர் முன் வந்தாரே என்று நாம் அடையும் சந்தோஷத்தைக் குறைவு கெடுக்கும்படியாக, பின்னால் இம் மலரில் ஒரு சிறு பெண்ணின் அபிநயத் தோற்றங்களையும் சேர்த்து விட்டிருக்கிறார்.

## இந்தியா அடிமையானது ஏன்?

[ஆசிரியர்: டால்ஸ்டாய்; மொழி பெயர்த்தவர்: மு. அருணாசலம்; பிரசுரம்: "தினசரி" காரியாலயம்; கிடைக்குமிடம்: சக்தி காரியாலயம், சென்னை; விலை: அணா 4.]

இந்தியா அடிமையானதற்குப் பலர் பலவிதமான காரணங்கள் சொல்லுகிறார்கள். ருஷ்ய மகானுகிய டால்ஸ்டாயும் தம்முடைய கருத்தை இந்த நூலிலே தெளிவாகச் சொல்லுகிறார். முடிவில், இந்தியர்கள் அடிமையானதற்கு இந்தியர்களே காரணம் என்று சொல்லுகிறார். அதை நாம் பரிபூரணமாக ஒப்புக்கொள்ளுகிறோம். எங்கேயோ ஒரு மூலையிலிருக்கும் ரஷ்யாவில், ஒரு குக்கிராமத்தில் வாழ்ந்த ருஷ்ய முனிவர் திருக்குறளிலிருந்து ஐந்தாறு குறள்களை மேற்கோளாகக் காட்டி நமக்கு உபதேசம் செய்யும்போது, நாம் அடிமையானதற்கு நாமே காரணம் என்பதை ஒப்புக்கொள்ளாதிருக்க முடியுமா?

## ஊர்வசி

[ஆசிரியர்: த. சிதம்பர சுப்ரமண்யம்; பிரசுரம்: ஜோதி பிரசுராலயம், சென்னை; விலை: ரூ. 2—0—0.]

"மனித உள்ளத்தின் அந்தரங்க பாவங்களை எடுத்துச் சொல்வதற்கு சிறு கதை எவ்வளவு சக்தி வாய்ந்ததோ, அவ்வளவு சக்தி வாய்ந்ததாகச் சிறு நாடகங்களும் இருக்க முடியும் என்பதை ஆசிரியர் அற்புதமாகக் காட்டியிருக்கிறார்" என்று ஸ்ரீ க. நா. சுப்ரமண்யம் இந்தப் புத்தகத்துக்கு அளித்திருக்கும் அழகிய முகவுரையில் கூறுகிறார். இப் புத்தகத்தைப் படிக்கும்போது, மனித உள்ளங்களின் அந்தரங்க பாவத்தை மட்டுமன்றி, தேவலோகத்திலுள்ள அப்ஸரஸ்கள், தேவதேவிகள்—ஏன் கடவுளுடைய அந்தரங்கத்தையே கூட எடுத்துச் சொல்ல முடியும் என்பதையும் ஆசிரியர் காட்டியிருப்பது தெரியவருகிறது. இன்னும், கண்ணுக்குப் புலனாகாத ஆத்மா, கர்மா முதலியவை என்ன பேசுகின்றன என்பதையும் ஆசிரியர் கூறியிருக்கிறார்.

மனிதனும், தேவரும், ஆத்மாவும் வெவ்வேறு உலகத்தில் வசிப்பவர்களாயிருக்கலாம். ஆயினும், அவர்கள் ஆசிரியருக்குச் சொந்தமான கற்பனை உலகத்தைச் சேர்ந்தவர்கள் தானல்லவா?

நாடகங்கள் கற்பனைக் களஞ்சியமாக இருப்பது போலவே, ஹாஸ்யக் களஞ்சியமாகவும் இருக்கின்றன.

## போஜன்

[ஆசிரியர்: டி. எஸ். நாராயண சாஸ்திரி பி.ஏ., பி.எல்.; பிரசுரம்: அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை; விலை: ரூ. 1—4—0.]

இது ஐம்பது வருஷத்துக்கு முன்னால் எழுதிய நாடகம் என்று பிரசுராலயத்தார் தங்கள் முகவுரையில் சொல்லுகிறார்கள். இது அவர்கள் சொல்லாமலேயே நமக்கு நன்றாகத் தெரிகிறது. ஐம்பது வருஷத்துக்கு முன்னால் தமிழ்நடை எந்தமாதிரியாக இருந்தது என்பதற்கு இப்புத்தகம் ஒரு சிறந்த உதாரணம். நாடகம் ரஸமாக அமைந்திருக்கிறது.

# "என்ன ஸார், உங்களைத்தானே!"



— நாடோடி —



"என்ன ஸார்! ஹி! ஹி!! சௌக்கியந்தானா?"

"…………"

"உங்களைத்தான் ஸார்! ஹி! ஹி!"

"…………"

"என்ன ஸார்! உங்களைத்தான் ஸார்! ஹி! ஹி! சௌக்கியந்தானா?"

மின்சார ரயிலில் எனக்கு எதிரே உட்கார்ந்திருந்தவர் தம் முகத்தை என் முகத்தில் இடிக்கும்படியாய்க் கொண்டுவந்து, "என்ன ஸார்! உங்களைத்தான் ஸார்! ஹி! ஹி! என்ன அப்பொழுது பிடித்துக் கேட்டுக் கொண்டிருக்கிறேன், பேசாமல் இருக்கிறீர்களே" என்று கேட்ட பிறகு தான் இத்தனை நாழியாக அவர் என்னைப் பார்த்துப் பேசிக் கொண்டிருந்தார் என்பது தெரிந்தது.

உடனே, "நீங்களா. ஹி! ஹி!" என்று பல்லை இளித்துவிட்டுத் திரும்பவும் நான் கையில் வைத்துக் கொண்டிருந்த புஸ்தகத்தில் ஆழ்ந்தேன்.

காரிருளில் ஒரு மின்னலைப் போல் நான் "ஹி! ஹி!" என்று ஒரு புன்முறுவல் செய்து விட்டுத் திரும்பவும் முகத்தை மூடிக் கொண்டதிலிருந்து நான் அவரை அடையாளம் புரிந்து கொள்ளவில்லை என்று அவர் தெரிந்து கொண்டார்.

"என்ன ஸார்! அடையாளம் தெரியவில்லையா? அதற்குள்ளாகவா மறந்து விட்டீர்கள்?" என்று கேட்டார்.

"இல்லை ஸார்! தயவு செய்து மன்னிக்க வேண்டும். எனக்கு ஞாபக மறதி ஜாஸ்தி—" என்று ஆரம்பித்தேன்.

நான் சொல்லி முடிப்பதற்குள் அவர் இடைமறித்து, "அப்படியானால் ஒரு நூறு ரூபாய் கை மாத்தாகக் கொடும்" என்று ஒரு ஹாஸ்ய வெடி குண்டைத் தூக்கிப் போட்டார்.

எனக்கு ஞாபக சக்தி இல்லையாதலால் அவருக்குக் கொடுத்த பணத்தை உடனே மறந்து விடுவேன் என்பது அவர் எண்ணம்.

இதுமாதிரி அனுபவம் எனக்குத் தினம் உண்டாகிறது. பார்த்த மனிதர்களை மறந்து விடுகிறேன். நடந்த விஷயங்கள் மறந்து விடுகின்றன. என்னை யாராவது அவமானப் படுத்தினால் அவர்களைப் பதிலுக்குப் பதில் அவமானப் படுத்த வேண்டும் என்று நினைத்துக்கொண்டிருக்கையிலேயே அது மறந்து விடுகிறது.

கிட்டத்தட்ட எல்லாப் புருஷர்களும் என்னைப்போல்தான் இருக்கிறார்கள். எனக்குக் கொடுக்க வேண்டிய பணத்தை ஒவ்வொரு மாதமும் "மறந்து விட்டது, மறந்து விட்டது" என்று சால்ஜாப்பு சொல்லிவரும் அடுத்த வீட்டு அண்ணாசாமி அய்யர்கூட உண்மையைத்தான் சொல்லுகிறாரோ என்று தோன்றுகிறது.

ஏனெனில் எனக்குத் தெரிந்தவரை ஸ்திரீகளுக்கு உள்ள ஞாபக சக்தி புருஷர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

அப்பா! இந்த ஸ்திரீகளுக்குத்தான் என்ன ஞாபக சக்தி!

ஸ்திரீகளுக்கு இருக்கும் ஞாபக சக்தியை நீங்கள் பிரத்தியக்ஷமாகத் தெரிந்து கொள்ள வேண்டுமானால் அதற்கு ஒரே ஒரு வழிதான் இருக்கிறது. நம் வீட்டு ஸ்திரீகள் அவ்வப்பொழுது அப்பளக் கச்சேரிகள் நடத்துகிறார்களே, அதைக் கவனித்தால், அதாவது அவர்கள் பேசுவதையெல்லாம் காது கொடுத்துக் கேட்டால் நான் சொல்வதன் உண்மை விளங்கும்.

ஸ்திரீகள் அப்பளக் கச்சேரி நடத்தும் போது, அவர்கள் பேசுவது காதில் விழும்படி பக்கத்தில் போய் எப்படி உட்கார முடியும் என்று சில அசட்டு ஆண் பேயர்கள் கேட்கலாம்.

இவர்களுக்கு நான் என்ன பதிலைச் சொல்ல! கூடத்தில் ஸ்திரீகள் அப்பளக் கச்சேரி நடத்தும்போது, நாம் ரேழியிலோ, அல்லது பக்கத்து அறையிலோ தூங்குவது போல் பாசாங்கு செய்து கொண்டே அவர்கள் பேசுவதைக் கவனித்

தான் யாராவது நம்மை அடிக்கிறார்களா, என்ன?

இதற்குக்கூடத் தைரிய மில்லாத துடை நடுங்கி நேயர்களுக்காக நான் சமீபத்தில் இதே முறையில் கவனித்த அப்பளாக் கச்சேரியில் நடந்த சம்பாஷணையில் ஒரு பகுதியை உதாரணத்துக்காகக் கொடுக்கிறேன்.

என் தாயார் :—என்ன கமலம்! (கமலம் என்பது அப்பளாக் கச்சேரி அங்கத்தினர்களில் ஒருவர்) இன்றைக்கு என்ன சமையல்?

கமலம் :—இன்றைக்கு ஒன்றும் இல்லை. கீரையை மசியல் பண்ணி, வெத்தக் குழம்பு வைத்திருக்கேன்.

தாயார் :—கீரை மசியல் என்றால் எங்கள் புக்ககத்துக் கிழவருக்கு (அதாவது என்ஞரின் தாத்தாவுக்கு) உயிர். என்னைக் குடித்தனம் வைத்த புதிதில் (என்ன ஞாபகம் பாருங்கள்! என் தாயாருக்கு இப்போது வயது ஐம்பத்தைந்து. குடித்தனம் வைத்தது பதினைந்து வயதில். அதாவது நாற்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னர் நடந்த சமாசாரத்தை என் தாயார் ஞாபகம் வைத்துக் கொண்டு சொல்லப் போகிறாள்!) ஒரு நாள் என்னைப் பார்ப்பதற்காக எங்கள் புக்ககத்துக் கிழவர் வந்திருந்தார். அதற்கு முதல் நாள்தான் உருளைக் கிழங்கு கறி பண்ணி, வெங்காய சாம்பார் வைத்தேன். (என்ன ஞாபகம் பாருங்கள்! நாற்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னர் தான் பண்ணின சமையலைக் கூட இந்த ஸ்திரீகள் ஞாபகம் வைத்துக்கொண் டிருக்கிறார்கள் என்றால் இவர்கள் சாமர்த்தியத்தை என்னவென்று சொல்ல!)

ஆகவே அன்றைக்குக் கீரை மசியலும், வெத்தக் குழம்பும் பண்ணினால் போதும் என்று அவர் சொல்லி விட்டார். அன்றைக்கு என்று கிழவர் வந்து நின்றாரே பார்க்கணும்! எனக்கா அன்றைக்கு என்று கீரை மசியலும், வெத்தக் குழம்பும் பண்ணியிருக்கிறோமோ, தினம் போனுக்கு இப்படித்தான் சமைத்துப் போடுகிறோம் என்று நினைத்துக் கொள்ளப் போகிறாரோ என்று பயம். ஆனால் அன்றைக்குக் கிழவர் சாப்பிட்ட ஆனந்தத்தைப் பார்க்கணுமே! 'நான் வருகிறேன் என்று தெரிந்து, எனக்கு என்று பண்ணி வைத்ததுபோல் எப்படி கீரை மசியலும், வெத்தக் குழம்பும் பண்ணினாய்' என்று கேட்டு, வெகு ஆசையாகச் சாப்பிட்டார்.

கமலம் :—நீங்கள் இதைச் சொல்றேளே, நான் முன்பு தலைச்சனைப் பிள்ளையாண்டிருக்கேனே, அப்பொழுது இப்படித்தான், என் மாமனார் திடீரென்று வந்து நின்றார். (இந்த அம்மாள் தலைச்சனைப் பெற்று அந்தத் தலைச்சனுக்கும் தலைச்சன், இடைச்சன் எல்லாம் பிறந்தாகி விட்டது. இருந்தும் அத்தனை வருஷங்களுக்கு முன்னர் நடந்த விஷயத்தை இந்த அம்மாள் இன்னும் ஞாபகம் வைத்துக் கொண்டிருப்பதைக் கவனியுங்கள்!)

இப்படியாகத்தானே அப்பளாக் கச்சேரியைக் கூர்ந்து கவனித்தால் இருபது, முப்பது வருஷங்களுக்கு முன்னர் தாங்கள் பண்ணின சமையல், தாங்கள் கட்டிக் கொண்டிருந்த புடவை, தங்கள் ஓரகத்தி கட்டிக் கொண்டிருந்த புடவை, எதிர்த்த வீட்டு அம்மாள் கட்டிக் கொண்டிருந்த புடவை, பக்கத்து வீட்டு அம்மாள் கட்டிக் கொண்டிருந்த புடவை தங்கள் கணவனுக்கு அப்பொழுது கிடைத்து வந்த சம்பளம், அவர்கள் கறிகாய் வாங்கும் விலை, அதே கறிகாயைத் தாங்கள் வாசலில் வாங்கிய விலை, ஆகிய ஆயிரத்தெட்டு விஷயங்களை அவர்கள் நுணுக்கமாக ஞாபகம் வைத்துக் கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியப்படுவீர்கள்.

நல்ல வேளையாக ஸ்திரீகளுக்கு நம் அதிக ஆதிக்கம் தானில்லை. தங்கோமோ, இத்தனை ஞாபக சக்தியைக் கொண்டு, நாம் செய்த பழைய குற்றங்களை யெல்லாம் ஞாபகம் வைத்துக்கொண்டு நம்மை வாட்டிப் பிழிந்து விடுவார்கள் என்பதில் சந்தேகமில்லை.

ஸ்திரீகள் ஞாபக சக்தியினால் கெடுதலே தவிர நன்மை கிடையாது என்பதற்கு ராமாயணத்திலேயே ஒரு பெரிய உதாரணம் கிடக்கிறது பாருங்கள்.

பதினாயிரம் ஆண்டுகள் ஆண்ட தசரதர் எந்தக் காலத்திலோ கைகேயிக்குக் கொடுத்த வரங்களைக் கூட ஞாபகம் வைத்துக்கொண்டு கைகேயியிடம் சொல்லக் கொண்டு தானே ராமன் காட்டுக்குப்போக நேர்ந்தது?

......ஆகவே, சரசு! இந்தக் கடிதம் கண்டதும்...சீ! சீ! என்ன ஞாபக மறதி! கட்டுரை எழுதிக் கொண்டே இருந்தவன், மறந்து போய் ஊரில் இருக்கும் சரசுவுக்குக் கடிதம் எழுத ஆரம்பித்துவிட்டேன்!

# தமிழ் ஜாம்வல்ஜான்

சுத்தானந்தபாரதி

**பு**துச்சேரி லீலைகள் மிகப்பல. ஒன்றைக் கேளுங்கள். எல்லாம் சொல்ல இது காலமில்லை. ஐயர் வந்ததும் ஒற்றர் தொல்லையிருந்தது. ஐயரை எப்படியாவது தூக்கிச் செல்வதென்றே ஒற்றப் புலிகள் சுற்றித் திரிந்தன. ஐயர் வெளியேறினால் பின்னாலே ஒற்றர் வருவார்கள். சரியான தனியிடத்தில் அகப்பட்டுக் கொண்டால் ஒரே தூக்கில் சின்னபாபுரெட்டி சத்திரம் போக வேண்டியதுதான். ஐயர் மிகக் கவனமாகவே பித்தனுக்கு எத்தனாயிருந்தார்.

ஒருநாள் அந்திமாலையில் தனியே ஐயர் ஒரு நண்பர் வீட்டிற்குப் புறப்பட்டார். வீடு தனிச்சந்தில் இருந்தது. ஆள் நடமாட்டம் இல்லை. ஒற்றர் தொடர்ந்தனர். வீட்டிற்குள் புகுந்த ஐயர் வெளியே வரவில்லை. அந்த வீட்டில் ஒரு நோயாளியைப் பார்க்கவே ஐயர் சென்றார். ஒற்றர்கள் இன்று ஐயர் தனியே அகப்பட்டுக் கொள்வார் என்று நீண்ட நேரம் காத்திருந்தனர்.



நண்பர் வீட்டிலிருந்து ஐயருக்குப் பதிலாக ஒரு பிலாக்கணம் வந்தது. ஐயோ, போனாயா போனாயா என்று பெண்கள் அழுதனர். ஒற்றர் "ஐயர் இருக்கிறாரா?" என்று மெல்லக் கேட்டனர். "ஐயர் அப்போதே வீட்டுக்குப் போய்விட்டாரே" என்றொருவர் சொல்லி நோயாளி இறந்து போனதாக விசனித்தார். அரைமணி நேரம் கழித்து வீட்டிக்குள்ளிருந்து ஒரு பாடை வெளியே வந்தது. உடல் வெள்ளைத்துணியால் மூடப்பட்டிருந்தது. பாடை சந்து பொந்துகளிலெல்லாம் நுழைந்து ஒரு தனியிடம் சேர்ந்ததும், கீழே இறங்கியது. அதிலிருந்த சவம் மெல்ல நிமிரென்றெழுந்தது. மூக்காட்டை உதறியது யார் அது? ஐயர் தான். நண்பரும் தொடர ஐயர் இரவு ஒன்பது மணிக்கு வீட்டிற்கு வந்தார்.

கதவைத் தட்டினார்; திறக்கவில்லை. நான்தான் என்று சொல்லி 'ஹ்றஹ' என்று காறி யுமிழ்ந்தார். உடனே பாக்யலக்ஷ்மியம்மாள் வந்து கதவைத் திறந்தார். தன்னை அறிமுகப்படுத்த ஐயர் காறியுமிழும் பழக்கம் வைத்திருந்தார். அந்த ஓசை கேட்டாலே மனைவி கதவைத் திறப்பது வழக்கம். இப் பழக்கம் ஐயருக்குக் கடைசிவரையி லிருந்தது. பாத்தீர்களா நமது தமிழ் ஜாம்வல்ஜானை!

---

ட்டுவின் கேள்வி — 9.



பிட்டு:—அப்பா, ஏன் தந்தி எழுதிக் கொண்டு வந்து தபால் பெட்டியில் போடுகிறீர்?
தகப்பனார்:—இது தெரியவில்லையா பிட்டு? இந்த நாளில் சமாசாரத்தைத் தந்தியில் அனுப்புவதை விடத் தபாலில் அனுப்பினால் சீக்கிரம் போய்ச் சேருமென்றுதான்!



# கம்பர் தரும் காட்சி



டி.கே.சி.

## 95. பரதன் சந்தோஷம்

"தசரதனாலும் கைகேசியாலும் எவ்வளவோ கேடு உலகத்துக்கு உண்டாய் விட்டது. ராஜ்ய பரிபாலன விஷயத்தில் முறை தவறுவதைப் போலக் கேடு ஒன்றிருக்கிறதா? மக்களுக்கு என்ன என்ன துன்பம் வரக் காத்திருக்கிறதோ? அவர்களுடைய கஷ்டம் இப்படி அப்படி என்று சொல்ல முடியாது. இதையெல்லாம் தீர்ப்பதற்கு நீ அயோத்திக்கு வந்து முடிசூடி அரசு புரிய வேண்டும்'' என்பதாக ராமனிடம் பரதன் சொன்னான்.

''பரதனுடைய மன நிலை இப்படியா இருக்கிறது!'' என்று யோசிக்கிறான் ராமன். அதன்பேரில் ''தம்பி, பரதனே! நான் ஒரு விஷயம் சொல்ல வேண்டும்; அதைக் கொஞ்சம் கேள்.

தாய் தந்தையருக்கு மக்கள் செய்ய வேண்டிய கடமை இன்னதென்று உனக்கு நான் சொல்ல வேண்டுமா? ஆனாலும் சொல்லுகிறேன்.

தனைய ராயினர்
  தந்தை தாயரை
வினையின் நல்லதோர்
  இசையை வேய்தலோ?
நினையல் ஓவிடா
  நெடிய வன்பழி
புனைத லோ?—ஐய!
  புகல்வை செய்கடன்!''

[தனையராயினார்: புதல்வர் என்பவர்கள்: வினையின் நல்லதோர் இசையை வேய்தலோ; தாய் தந்தையர் காரியங்களில் அவர்களுக்குப் புகழைச் சூட்டுகிறதோ: நினையல் ஓவிடா: ஜனங்கள் என்றென்றும் சிந்தித்துக் கொண்டிருக்கும் படியான; நெடிய வன்பழி புனைதலோ: நெடுங்காலம் நிற்கக்கூடிய பழியைச் சூட்டுகிறதோ — தனையராயினார் செய்கடன் புகல்வை: நீயே சொல் அப்பா!]

முடிவான வார்த்தையாக ராமன் தன் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறான்.

''எந்தை ஏவ, ஆண்(டு)
  ஏழொ(டு) ஏழ்என
வந்த காலம்,நான்
  வனத்துள் வைக,—நீ
தந்த பாரகம்
  தன்னை மெய்ம்மையால்
அந்த நாள்எலாம்
  ஆள்,என் ஆணையால்!''

[எந்தை ஏவ: நம் தந்தை கட்டளை யிட்டிருப்பதால்; ஆண்டு ஏழொடு ஏழ் என வந்த காலம்: பதினாலு வருஷம் என்று ஏற்பட்ட காலம்; தந்த பாரகம் தன்னை: தந்தை நமக்குத் தந்த இந்த ராஜ்யத்தை; மெய்ம்மையால் அந்த நாள் எல்லாம் ஆள்: உண்மையில் அரசனாகவே இருந்து அந்தப் பதினான்கு வருஷமும் நீ ஆளவேண்டும்; என் ஆணையால்: இது நான் கொடுக்கிற கட்டளை என்றே எண்ணிக் கொள்.]

பார்த்தான் பரதன்; வேறு வழியின்றி ஒப்புக்கொண்டு விடுகிறான்.

''ஆமெனில், ஏழிரண்(டு)
  ஆண்டில் ஐய! நீ,
நாமநீர் நெடுநகர்
  நண்ணி, நானிலம்
கோமுறை புரிகிலை
  என்னில்,—கூர்எரிச்
சாம்அது சரதம்: நின்
  ஆணை சாற்றினேன்!''

[ஆமெனில்: பதினாலு வருஷமும் நான் ஆளுகிறதென்று வைத்துக் கொண்டால்—இன்னொரு காரியம்: நாம நீர் நெடுநகர் நண்ணி: நீர் வளங்கொண்ட பெரும் நகரான அயோத்திக்குத் திரும்பி வந்து: நானிலம் கோமுறை புரிகிலை என்னில்: ராஜ்யத்தை அரசனாயிருந்து ஆளவில்லை என்று ஏற்பட்டால்; கூர் எரிச் சாம் அது சரதம்: பெரிய அக்கினி வளர்த்து அதில் விழுந்து நான்

சாவது நிச்சயம்; நின் ஆணை சாற்றினேன்: உன்னுடைய ஆணையே இது என்று கருதியே சொல்லுகிறேன். ஆகையால் இந்த முடிவை விட்டு விலகுவதில்லை.

குறிப்பு: ராமனது மனப்பாங்கை பரதனும் நன்றாய் உணர்கிறான். ராமனது நிலையில் தான் இருக்க நேர்ந்திருந்தால் வனவாசத்தை விட்டுவிட்டு அயோத்திக்குத் திரும்பச் சம்மதிக்க மாட்டேன் என்று தானே எண்ணுகிறான். அதனாலேயே ராமன் சொன்ன வார்த்தைக்கு இணங்குகிறான் பரதன்.]

இப்படிச் சொல்லிய பரதனை ராமன் பார்த்தான். அவனிடத்திலிருந்த துன்பம் நீங்கியது என்பதையும் கண்டு கொண்டான். அக்கினிப் பிரவேசம் செய்வதற்கான அவனது உறுதியையும் கண்டு கொண்டான்.

என்பது சொல்லிய
  பரதன், யாதும்ஓர்
துன்பிலன், அவனது
  துணிவை நோக்கினான்;
அன்பினன் உருகினன்,
  'அன்ன(து) ஆ(க)'
    என்றான், —
தன்புகழ் தன்னினும்
  பெரிய தன்மையான்.

[பரதன் யாதும் ஓர் துன்பிலன்: பரதனுக்குத் துன்பம் நீங்கிவிட்டது; அவனது துணிவை நோக்கினான்: அந்தப் பரதனது துணிவை ராமன் நன்றாய்க் கண்டுகொண்டான்; அன்பினன் உருகினன்: அன்புமயமாய் அப்படியே உருகிவிட்டான்; 'அன்னது ஆக' என்றான்: வாய்பேச முடியவில்லைதான். 'சரி அப்பா' என்று ஏதோ முனகிய வண்ணமாய் வார்த்தை சொன்னான்; தன் புகழ் தன்னினும் பெரிய தன்மையான்: ராமனுடைய புகழ் சாமான்யமல்ல, எங்கும் பரவி கணிக்கக் கூடாததாய் இருக்கிறது; அவனுடைய உண்மையான தன்மையோ அதைவிடக் கணிக்கக் கூடாத விஷயம்.—இராமனுடைய உயர்வைப் பற்றிய அதிசய பாவம் கடைசி அடியில் எப்படித் துலங்குகிறது!]

பரதனுக்கு அயோத்தியிலிருந்து புறப்படும்போதே ஒரு சந்தேகம்; ராமன் அயோத்திக்கு திரும்பி வரவே மாட்டான் என்பதாக. இப்போது நிச்சயமாகப் பதினாலு வருஷங் கழித்து வருகிறான் என்பது ஏற்பட்டு விட்டது; அதனால் பரதனுக்குச் சந்தோஷமே வந்துவிட்டது. ஆனால் இந்த சந்தோஷம் விநாடிக் கணக்கான சந்தோஷந்தான் என்பதை இனிப் பார்ப்போம்.




### பயப்படும் காரணம்

நண்பன் :—சும்மா குடையை வாசலிலேயே வை, அப்பா! யார் எடுக்கப்போறு?

மற்றவன் :—இல்லை; குடைக்குச் சொந்தக்காரன் எடுத்துக்கொண்டு போய்விடப் போகிறானே என்றுதான் பார்க்கிறேன்!

—ஆர். சேஷாத்திரி.



### ஆகாச கங்கை!

வீட்டுக்குக் குடி வருபவர் :—ஏன் ஸார், என்ன வீடு முழுதும் சிறு சிறு தாரைகளாக ஒழுகுகிறதே?

வீட்டுக்காரர் :—ஏன் ஸார், நீங்கள் கொடுக்கும் 15 ரூபாய் வாடகைக்கு ஆகாச கங்கையா கொட்டும்?

—எஸ். எஸ். ராஜன்.



### சரிதான்

சாப்பிட வந்தவர் (கோபமாய்) :—என்ன ஐயா, மெதுவடை ஒன்று கேட்டு அரைமணி யாகிறது! இன்னும் வரவில்லை.

ஓட்டல்காரர் :—நீர் கேட்டது மெது வடைதானே?

வந்தவர் :—ஆமாம்.

ஓட்டல்காரர் :—அது மெதுவாய்த்தான் வரும்! —எஸ். ரத்னம்.



### சமயாசமயம்!

"கொடுத்த கடனைக் கேட்பதற்கு இப்படியா வருவா? சமயாசமயமே தெரிய மாட்டேங்கிறதே உனக்கு!"

"பின்னே, நான் எப்பொழுது வர வேண்டும்?"

"நான் வீட்டிலில்லாத பொழுது!"

—பி. கே. கிருஷ்ணமூர்த்தி.



### சாமர்த்தியசாலி

"'பார்த்து எழுதுதல்' என்பதைப் பற்றி ஒரு புத்தகம் எழுதப் போகிறேன்."

"எதைப் பார்த்து அந்தப் புத்தகத்தை எழுதப் போகிறாய்?" —கு. ரா.

### உண்மைதான்

ஜவுளிக் கடைக்காரர் :—இது ஜெர்மன் சாயமுங்க, நீடித்து இருக்கும். இந்தப் புடவையை வாங்கிக்கிங்க.

கனவான் :—வேண்டாமப்பா! ஜெர்மன் சாயம்தான் இப்பொழுது வெளுத்துக் கொண்டு வருகிறதே! —எஸ். சுப்புஸ்வாமி.



### தெரியாத விஷயம்

ராமு :—என் நாய் எங்கேயோ போய் விட்டது ஸார்!

சாமு :—பத்திரிகைக்கு விளம்பரத்துக்கு எழுதி யனுப்புங்கள் ஸார்! வந்துவிடும்.

ராமு :—அனுப்பி என்ன ஸார் பிரயோஜனம்? என் நாய்க்கு வாசிக்கத் தெரியாதே.

—ச. சுப்பிரமணியன்.



### நல்ல விருந்து!

சேஷய்யர் (தன் நண்பராகிய டாக்டர் சுப்புராவிடம்) :—என்ன டாக்டர்வாள்! நேற்று இரவு சம்மாத்திலே நடந்த விருந்துக்கு உங்களை அழைத்தும் நீங்க வரவேயில்லை! வந்திருந்தா எங்களுக்கும் திருப்தி; உங்களுக்கும் திருப்தியாக இருந்திருக்கும்.

டாக்டர் சுப்புராவ் (சிரித்துக் கொண்டே):-அதனால் என்ன? இப்போதும் திருப்திதான்! நேற்று ராத்திரி உங்க வீட்டிலே விருந்து சாப்பிட்ட நாலு ஆசாமிகள் இன்னைக்குக் காலையிலே என் கிட்டே வந்து வயிற்று வலிக்கு மருந்து வாங்கிண்டா!

—கே. ஆர். ஸ்வாமி.



### பார்த்த இடம்

ஒருவர்:—ஏன், ஸார்! என்னைப் பார்த்துப் புன்முறுவலாய்ச் சிரித்தீர்களே, என்னை



இதற்குமுன் எங்கேயாவது பார்த்திருக்கிறீர்களோ?

மற்றொருவர்:—மிருகக் காட்சிச் சாலையில் பார்த்ததாக ஞாபகம். —டி. எம். குருசாமி.



# அன்பின் அடையாளம்

விந்தன்

இராமபிரான் சீதா தேவியைக் கல்யாணம் செய்து கொள்வதற்காகக் கைலையங்கிரியி லிருந்த சிவதனுசு பூலோகத்துக்கு வரவேண்டி யிருந்த தல்லவா? அதேபோல் புவனேசுவரன் தேவகியைக் கல்யாணம் செய்து கொள்வதற்கும் வேலங்காட்டிலிருந்த புலி ஊருக்குள் நுழைய வேண்டி யிருந்தது!

***

புஷ்பவனம் ஜமீன்தாரின் ஏக புத்திரன் புவனேசுவரன். சுக வாசத்தின் காரணமாக, சோம்பல் ஏறிப் போயிருந்த அவன் உடம்புக்கு எப்பொழுதாவது கொஞ்சம் சுறுசுறுப்பு வேண்டி யிருக்கும். அப்பொழுதெல்லாம் அவன் தன் பரிவாரங்களுடன் காட்டுக்கு வேட்டையாடச் செல்வது வழக்கம்.

அன்று பரிவாரங்கள் அவனுக்கு முன்னாலேயே சென்றுவிட்டன. அவன் மட்டும் தனியே காரில் சென்று கொண்டிருந்தான். வழியில் ஒரு பயங்கரமான காட்சி. நடு ரஸ்தாவில் புலி ஒன்று அப்படியும் இப்படியுமாகப் பார்த்துப் பயங்கரமாக விழித்துக் கொண்டே, ஓட்டமும் நடையுமாகச் சென்றுகொண்டிருந்தது. ஜனங்கள், "செத்தோம்! பிழைத்தோம்!" என்று தங்கள் மனம் போனபடி ஓடிக் கொண்டிருந்தனர்.

இந்தச் சமயத்தில், சாலையோரத்து மரங்களின் மேல் ஏறிக் கொண்டிருந்தவர்களில் ஒருவன், "ஐயையோ! அதோ பாருடா, கலெக்டரு அய்யாவின் தங்கச்சி மவ!" என்று அலறியது ஜமீன்தார் மகனின் காதில் விழுந்தது.

அடுத்த நிமிஷம் காரில் கன வேகமாகச் சென்று கொண்டிருந்த அவன், பயத்தால் நடுநடுங்கி நின்ற ஒரு யுவதியின்மேல் அந்தப் புலி பயங்கரமாக உறுமிக் கொண்டே பாய்வதற்குச் சித்தமாயிருப்பதைக் கண்டான். பரபரப்புடன் அந்தப் புலியை நோக்கிக் காரைச் செலுத்தினான். இயந்திரப் புலியைக் கண்டதும் இயற்கைப் புலி சிறிது நகர்ந்தது. காரை அந்த யுவதிக்கு முன்னால் நிறுத்தி, "ஏறிக் கொள்ளுங்கள்!" என்றான்.

அவளும் மின்னல் வேகத்தில் பாய்ந்து காரில் ஏறிக் கொண்டாள். அவனும் அதே வேகத்தில் காரைச் செலுத்தினான்.

★

அவன் மனம் கற்பனை உலகில் சஞ்சரிக்க ஆரம்பித்து விட்டது. அவள் ஏதோ ஒரு பங்களாவைச் சுட்டிக் காட்டிக் காரை நிறுத்தச் சொல்கிறாள். அவன் நிறுத்துகிறான். அவள் காரை விட்டுக் கீழே இறங்கி ஓடோடியும் சென்று, தன் அப்பாவிடம் நடந்தவற்றை யெல்லாம் மூச்சு விடாமல் சொல்கிறாள். அவள் அப்பா ஓடோடியும் வந்து அவனை ஆலிங்கனம் செய்து கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடிக்கிறார். "அப்பா! எமன் வாயிலிருந்து என் குழந்தையைக் காப்பாற்றினாயல்லவா? இனிமேல் அவளைக் கடைசி வரையில் காப்பாற்ற வேண்டிய பொறுப்பு உன்னுடையதுதான்!" என்று சொல்லி, அவள் கரத்தைப் பிடித்து அவன் கரத்தில் வைத்து ஆசி கூறுகிறார்.

இம்மாதிரி மனோ லோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்த அவனை நோக்கி, "அதோ, 'ஹரிஹரன் ஐ. ஸி. எஸ்.' என்று சுவரில் 'போர்டு' மாட்டி யிருக்

கிறது, பாருங்கள்; அந்தப் பங்களாவுக்கு முன்னால் தயவு செய்து காரை நிறுத்துங்கள்!'' என்றாள் அந்தப் பெண்.

அந்தக் குரலொலி மின்சார சக்தியைப் போல் அவன் உச்சியிலிருந்து உள்ளங்கால் வரை ஊடுருவிச் சென்றது.

அவள் சுட்டிக் காட்டிய வீட்டுக்கு எதிரே காரை நிறுத்தினான். 'திடுதிப்' பென்று கீழே இறங்கிய அவள், 'தாங்ஸ்' என்று சொல்லி விட்டு, வீட்டை நோக்கி ஓட்டம் பிடித்து விட்டாள்.

ஆனாலும் புவனேசுவரன் நம்பிக்கையை இழக்கவில்லை. அவள், அவள் அப்பா வரப் போவதையும், அவர் தன்னை ஆலிங்கனம் செய்து கொண்டு ஆனந்தக் கண்ணீர் வடிக்கப் போவதையும் எதிர்பார்த்துக் காத்திருந்தான்.

ஆனால், அப்பா வரவில்லை; அவளே வந்தாள். வந்தவள் சும்மா யிருக்கவும் இல்லை. "எதற்காகக் காத்திருக்கிறீர்?" என்று வேறு கேட்டு வைத்தாள்.

அவன் என்னத்தைச் சொல்வது? காரை வந்த வழியே திருப்பினான். அப்பொழுது 'கொல்' லென்ற சிரிப்பின் ஒலி அவன் காதில் விழுந்தது.

சிரித்தவன் அவன்தான்!

★

இந்தச் சம்பவம் நடந்து மூன்று மாதங்களாகியிருக்கும். அவளை மீண்டும் சந்திக்க முடியும் என்று புவனேசுவரன் எதிர்பார்க்கவே யில்லை. ஆனால் உலகத்தில் சற்றும் எதிர்பாராத காரியங்கள்தானே சர்வ சாதாரணமாக நடக்கின்றன?

கோடைகால வெப்பத்தைப் புஷ்பவனத்து மகாஜனங்கள் அத்தனை பேராலும் சகித்துக் கொள்ள முடிந்தது. ஆனால் ஜமீன்தார் மகனால் மட்டும் அந்த வெப்பத்தைச் சகித்துக் கொள்ள முடியவில்லை. ஆகவே, அவன் உதகமண்டலத்திற்குப் பிரயாணமானான். அன்று 'நீலகிரி எக்ஸ்பிரஸ்'ஸில் அவனுக்கென்று பிரத்தியேகமாக இடம் நிச்சயம் செய்து வைக்கப்பட்டிருந்தது. அவன் அந்த வகுப்புக்குள் நுழைந்த போது, ஒரு யானைத் தலை அளவு 'டிஸம்பர்' பூக்களைத் தன் தலையில் கட்டி வைத்துக் கொண்டிருந்த ஒரு யுவதி, அடிக்கடி பினாட் பாரத்தை நோக்கிய வண்ணம் அங்கே உட்கார்ந்திருப்பதைக் கண்டான். அவள் அப்படியும் இப்படியுமாக அசையும் போதெல்லாம் அவள் தலையிலிருந்த பூச்செண்டும் அவளுடன் அசைந்தாடிக் கொண்டிருந்தது. கம்பன் கண்ட சீதையும், காளி

தாசன் கண்ட சகுந்தலையும் அழகுக்கு அவளிடம் பிச்சை யெடுக்க வேண்டும்போலிருந்தது. அவளைக் கண்டதும் அவள் ஏனோ சற்று நாணிக் கோணிக் கொண்டாள். புவனேசுவரனை வெட்கம் பிடுங்கித் தின்றது. ஆனாலும் அவளை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்து விட்டான்.

அவள் வதனம் எங்கேயோ பார்த்த வதனமாயிருந்தது. புருவத்தை நெறித்துச் சிறிது நேரம் சிந்தையைத் தூண்டிப் பார்த்தான். ஆம்; அவன் பள்ளி மாணவனாயிருந்தபோது பார்த்த முகம். அவள் பெயர் தேவகி. ஒரு நாள் அவள் வகுப்பில் மறந்து வைத்துவிட்டுச் சென்ற "காணமற்போன காதலன்" என்னும் நவீனத்தை அவன் கண்டெடுத்துக் கொடுத்திருக்கிறான். அந்தச் சமயத்தில் அவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டதைத் தவிர வேறொன்றும் அறியார்கள்.

இந்தச் சம்பவம் அவன் நினைவுக்கு வந்ததும், அவள் யாரை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள் என்று கவனித்தான். பிளாட் பாரத்தில் இருவர், யாரோ ஒரு பெரிய மனிதருடன் பேசிக் கொண்டிருந்தனர். என்ன ஆச்சரியம்! அந்த இருவரில் ஒருத்தி அன்று அவன் புலிக்கு எதிரே சந்தித்த யுவதி! அவளுடன் சேர்ந்தாற்போல் நிற்கிறானே, அந்த மனிதன் யார்? அவளுடைய கணவனா? அதற்குள் கல்யாணமாகி விட்டதா?

இப்படி அவர்கள் விஷயத்தில் அவன் அனாவசியமாகத் தலையிட்டு அவதிப் பட்டுக் கொண்டிருந்தபோது, அந்த யுவதி புவனேசுவரனைப் பார்த்து விட்டாள். உடனே அவள் தன் அருகே யிருந்த வாலிபன் காதோடு காதாக ஏதோ சொன்னாள். அதைக் கேட்ட அந்த ஆசாமி, "என்ன! நிஜமாகவா, உமா?" என்று வியப்புடன் கேட்டுக் கொண்டே விரைந்து வந்து புவனேசுவரனின் கையைப் பிடித்துக் குலுக்கித் தன் பக்கத்தில் அவனை உட்கார வைத்துக் கொண்டான். அவர்களுக்கு எதிரே உட்கார்ந்திருந்த தேவகியின் பக்கத்தில் உமாவும் உட்கார்ந்தாள். புவனேசுவரனை யாருக்கும் தெரியாமல் பார்ப்பதற்காகத் தன் கை விரல்களின் நக அழகைப் பார்ப்பவள்போல் பாசாங்கு செய்ய ஆரம்பித்து விட்டாள் தேவகி!

"உங்களால்தான் நான் உமாவைக் கல்யாணம் செய்துகொள்ள முடிந்தது!" என்றான் அந்த ஆசாமி.

புவனேசுவரனுக்கு ஒன்றும் புரியவில்லை. "எப்படி?" என்று கேட்டான்.

"அந்தப் புலி வி த்திலிருந்து நீங்கள் உமாவைக் காப்பாற்றினீர்களல்லவா?"

"ஆமாம்; அதற்கென்ன?"

"அதற்கென்னவா? அந்த விபத்திலிருந்து நான்தான் தன்னைக் காப்பாற்றியதாகத் தன் அப்பாவிடம் பொய் சொன்னாள் உமா. அதனால்தான் அவள் அப்பா எங்களுடைய கல்யாணத்திற்குச் சம்மதித்தார்!"

"என்ன!"

"ஆமாம்; நீங்கள் அன்று உமாவைக் கொண்டு வந்து விட்டது உண்மையில் அவள் வீடு அல்ல; என்னுடைய வீடு. என் அத்தையின் பெண்தான் உமா. ஆனால், அவள் அப்பா ஏதோ குடும்பத் தகராறை வியாஜமாக வைத்துக் கொண்டு, எங்கள் கல்யாணத்தை ஆட்சேபித்து வந்தார். நல்ல வேளையாகச் சமயத்தில் நீங்கள் உதவி செய்தீர்கள்."

பதிலுக்கு ஒன்றும் சொல்லத் தோன்றவில்லை புவனேசுவரனுக்கு; பேசாமல் இருந்தான்.

"உங்கள் உதவிக்குப் பிரதி யுபகாரமாக நான் செய்வதற்கு என்ன இருக்கிறது?" என்றான் அந்த வாலிபன்.

இந்தச் சமயத்தில், "ஏன் இல்லை? உங்கள் தங்கை தேவகி யில்லையா?" என்றாள் உமா.

"போ, மன்னி!" என்று சொல்லிக் கொண்டே தலையைக் குனிந்து கொண்டாள் தேவகி.

"ஆமாம்; தங்களிடம் எனக்கு இருக்கும் அன்பின் அடையாளமாக நீங்கள் தேவகியை ஏற்றுக் கொண்டால் நம்முடைய நட்பு என்றும் நீடித்திருக்கும்" என்று சொல்லிவிட்டு, அந்த வாலிபன் புவனேசுவரனின் முகத்தைப் பார்த்தான்.

அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்தது.



"தாத்தா! எங்கள் வகுப்பில் நான் இரண்டாவது பையன்."

"பேஷ்! அப்படித்தாண்டா சமர்த்தா யிருக்கணும். உன் வகுப்பில் எத்தனை பையன்கள்?"

"இரண்டு பையன்கள்!"

இருமல்



இருமலுக்கும் ஜலதோஷத்திற்கும்
உயர்ந்த மருந்து



ஸிரோலின்
ரோச்

தாய் சொல் மிக்க
வாசகமில்லை

லோத்ரா

கர்ப்பாசயரோக
நிவாரணி

கேசரி குடீரம் லிமிடெட், மதராஸ்

தமிழ் நாடு ஏஜெண்டுகள் :
சீதாராம ஜெனரல் ஸ்டோர்ஸ்
மேலக் கோபுர வீதி : மதுரை




# உங்கள் மனதிற்குகந்த நறுமணம் தொண்டைக்குக் கெடுதல் செய்யாது

டிலக்ஸ் டெனர் சிகரெட்டின் உண்மை மணத்தை நீங்கள் விரும்புவீர்கள். உயர்ந்ததும், அவசியமானது மான பண்டங்கள் கிராக்கியாய் விற்கும் இந்நாளில் கூட இந்த சுகம் நிறைந்த சிகரெட்டுகள் நம்மில் பலர் வாங்கக்கூடிய விலைக்கே விற்கப்படுகின்றன. உத்தரவாதமுள்ள 100% வர்ஜீனியா புகையிலையிலிருந்து தயாரிக்கப்பட்டது டெனர் சிகரெட்டுகள்.

டி லக்ஸ் டெனர் சிகரெட்டு
ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**tenor**

**Is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD. LONDON.

Regd. No. M. 4392




ஸிம்ப்ஸன்



ஸிம்ஸன் முத்திரையுள்ள க்யாஸ்பிளாண்ட் எளிதில் புறப்படச் செய்யுந் தன்மையுள்ளது, தவிர க்யாஸிலிருந்து பெட்ரோலுக்கோ, க்யாஸும் பெட்ரோலும் சேர்த்து ஓட்டுவதற்கோ, சுலபமாக மாற்ற பிரத்தியேகமாய்ச் செய்யப்பட்ட "ஸ்டான் ஸிம்கோ" "க்யாஸ் மிக்ஸிங் சேம்பர்" என்னும் கருவியை உடையது.

க்யாஸ் எவ்வளவு பரிசுத்தமாக இருக்கிறதோ அவ்வளவு மேன்மையான உழைப்பு

**ஸிம்ப்ஸன் & கம்பெனி, லிமிடெட்.**
மவுண்ட்ரோடு, மதறாஸ்.



1840ல் ஸ்தாபித்த ஓர் இந்திய தொழிற் சாலை

இன்றைய சிறந்த முதலீடு, நாஷனல் ஸேவிங்ஸ் ஸர்டிபிகேட்டுகள்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press.
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras.